அறிவரங்கம்

# ஆனந்த கங்கை

ஆதி சங்கரர்

ஆரார்

# ஆனந்த கங்கை

## ஆதி சங்கரர்

ஆரார்

கிடைக்குமிடம்

டாக்டர். இரா. இராசகோபாலன்

அண்ணா நகர், மதுரைச் சாலை

திருப்புத்தூர்-623 211

(பசும்பொன் மாவட்டம்)

விலை ரூ. 18/-

## பதிப்புரை

இந்தியா உலகுக்கு அளித்த மாபெரும் தத்துவ ஞானி ஆதி சங்கரர் (கி.பி. 788-820) 'செப்புமொழி பதினெட்டு' ஆகஇருப்பினும் 'சிந்தனை ஒன்றுடையாள்' என்று இந்தியாவைச் சிந்தனையில் ஒன்றுபடுத்திய ஆதி சக்திகளில் ஒருவர்.

தெற்கே காலடியில் பிறந்தார். எட்டு வயதில் துறவு பூண்டார். பதினாறு வயதில் இலக்கண இலக்கிய தருக்க தத்துவ வடநூற் கடலை நிலைகண்டுணர்ந்தார். ஆசான் கோவிந்தரின் ஆசியால் அத்வைத இறைத் தூதராக எழுந்தார். நாடெங்கும் நடமாடும் பல்கலைக் கழகமாகப் பயணம் செய்தார். செயல்வீரராக அறிஞர் உலகைத் தன் வயப்படுத்தினார். திசைக்கு ஒன்றாக மடம் நான்கு கண்டார்.

மறைவுமுடிவு நூல்களுக்கு நுண்புல உரைகள் வரைந்தார். விளக்க நூல்கள் எழுதினர். மக்கள் மன முருகிப் பாடப் பக்திப் பாக்கள் புனைந்தார். நாடெங்கும் இருந்த வெறுமையைப் போக்கிப் புதுமலர்ச்சியைத் தோற்றுவித்தார். முப்பத்திரண்டாவது வயதில் இமயத் துக் கேதாரத்தில் இறைமயம் ஆனார்.

காலத்தை வென்ற அருட்பெருங்குரவரான ஆதி சங்கரரின் தித்திக்கும் தோத்திரப் பாக்களில் பதினைந்து இந் நூலில் இடம்பெற்றுள்ளன. சந்த அழகும் கவிதைச் செறிவும் இசைநீர்மையும் சான்ற பாக்களாக வடமொழி யில் உள்ளவை, ஆங்கிலத்தின் வழித் தமிழில் இங்கு வசன கவிதை வடிவில் தரப் பெற்றுள்ளன.

தத்துவப் போக்குடைய தட்சிணா மூர்த்தி தோத் திரமும் இலக்கியச் செழுமை மிக்க சிவானந்த லகரியும் அறிவு அழுத்தம் உள்ள பஜகோவிந்தமும் இதில் உள்

ளன. உள்ளத்தை நெகிழச் செய்யும் தோத்திரப் பாக்கள் மற்றவை. கங்கையைப் பற்றிய பாடலும் உளது; அதுவே இத் தொகுப்புக்குத் தலைப்பாக அமைகிறது.

12 ஆம் நூற்றாண்டு விழாக் காணும் அருள் நாயகருக்கு எங்கள் பணிவார்ந்த வணக்கத்தை இதன் வாயிலாகச் செலுத்துவதில் பெருமகிழ்ச்சி அடைகிறோம்.

O

## பயன்பட்ட நூல்கள்


I. **Atma Bodha : Appendix**
**Swami Nikhilananda**
**Sri R.K. Math Madras**

II. **Sivananda Lahari**
**Swami Tapasyananda**
**Sri R.K. Math Madras**

III. **Hymns of Adi Sankara**
**T.M.P. Mahadevan**
**Motilal Banarsidass, Madras.**


O

## உள்ளுறை

1

# குருவைப் பணிவோம் *

உங்கள் உடம்பு காண்பதற்கு இனிது,
பூரண நலத்துடன் எப்போதும் உள்ளீர்கள்,
உங்கள் பெயர்க்குக் களங்கம் இல்லை
ஈட்டிய தங்கம் மலைபோல் உளது

ஆயினும்

மனம்ஆசானின் திருவடித் தாமரையில்
தோய்ந்திரா விட்டால்
அவற்றால் உங்கட்குப் பயன்தான் யாதோ,
அவற்றால் பயன்தான் யாதோ?

○

---

* குரு அஷ்டகம்

உங்களுக்கு நற்பேறு, சொத்துகள்
மாண்புள மனைவி மக்கள்
அவர்களின் மக்கள், நட்பு,
குடும்ப சுகங்கள் என எல்லாம் அருளியிருபினும்
மனம் ஆசானின் திருவடித் தாமரையில்
தோய்ந்திரா விட்டால்
அவற்றால் உங்கட்குப் பயன்தான் யாதோ,
அவற்றால் பயன்தான் யாதோ?

○

வேதத் தொகுதி உங்கள் நாவினை
உறையுளாக் கொண்டிருப்பினும்
கலைகள் கற்றவராக, நீங்கள் உரையும் பாட்டும்
வரைதல் வல்லவரா யிருப்பினும்
மனம் ஆசானின் திருவடித் தாமரையில்
தோய்ந்திரா விட்டால்
அவற்றால் உங்கட்குப் பயன்தான் யாதோ,
அவற்றால் பயன்தான் யாதோ?

○

தன் தேசத்தில் சிறப்பும் அயல் தேசங்களில் புகழும்
நீங்கள் பெற்றிருப்பினும்
பக்திப் பணிகள் புரிந்தும் பொல்லாங்கு எல்லாம்
தவிர்ந்தும் இருப்பினும்
மனம் ஆசானின் திருவடித் தாமரையில்
தோய்ந்திராவிட்டால்
அவற்றால் உங்கட்குப் பயன்தான் யாதோ,
அவற்றால் பயன்தான் யாதோ?

○

நீங்கள் முடிவாக, உலகப் பேரரசர் ஆயினும்
புவியில் மன்னருள் மன்னரை உங்களின்
பணியாளராகப் பெற்றிருப்பினும்
மனம், ஆசானின் திருவடித் தாமரையில்
தோய்ந்திரா விட்டால்
அவற்றால் உங்கட்குப் பயன்தான் யாதோ,
அவற்றால் பயன்தான் யாதோ?

O

உங்களது அன்பு உதவியை ஒவ்வொரு நாடும்
எதிரொலி செய்யினும்
எவருடைய அருளால் மட்டுமே இவ்வுலகினை
வெல்லல் இயலுமோ,
அந்த ஆசானின் திருவடித் தாமரையில்
மனம் தோய்ந்திராவிட்டால்
அவற்றால் உங்கட்குப் பயன்தான் யாதோ,
அவற்றால் பயன்தான் யாதோ?

O

நீங்கள் இன்பங்களை நாடுவதில்லை
சொத்தினாலும் மனைவியினாலும்
சுகம் பெறுவதில்லை யாயினும்
யோக சக்திகளை மறுத்தும்
யாகப் பயன்களை வெறுத்தும்
இருப்பீர்களாயினும்
மனம் ஆசானின் திருவடித் தாமரையில்
தோய்ந்திராவிட்டால்
அவற்றால் உங்கட்குப் பயன்தான் யாதோ,
அவற்றால் பயன்தான் யாதோ?

O

இல்லத்து இருத்தல் போன்றே
வனத்தில் உறைய நீர் ஆயத்தமாயிருப்பினும்
கருமத்தில் பற்று வையாதும்
அழுக்கு மனம் உடலில் பற்றிலாதும்
இருப்பினும்
அவற்றால் உங்கட்குப் பயன்தான் யாதோ,
அவற்றால் பயன்தான் யாதோ?

O

புதுப் பயிற்சியாளர், மடத்தினில் இருப்போர்,
ஆட்சியாளர், உலகியல் மாந்தர், ஆகியோருள்
எந்த நல்லான்மா,
ஆசான் புகழைக் கூறுமிந்தப்
பாக்களை நீள நினைந்து அவர்தம்
அறிவுரைகளை நிலை ஆர்வத்துடன்
நெஞ்சிற் கடைப்பிடிக்கிறாரோ,
அவர், அனைவரும் பெறுதற்கு ஆசைகொள்கிற
கருவூலமாம் பிரம்மத்தை அடைகிறார்.

O

2

# ஆசான் வடிவுத் தென்முகக் கடவுள் *

ஒரு நகரின் காட்சி கண்ணாடியில் மிளிர்கிறது
அங்ஙனமே
என் உள்ளத்து இருப்பது உலகாக மிளிர்கிறது;
கனவு காண்பது மனம்; அது வெளியில்
நிகழ்வதாத் தெரிகிறது அங்ஙனமே
உலகம் யாவும் கிடப்பது உள்ளத்தில்
மாயத்தால் அது புறத்தே இருப்பதாக்
காணக் கிடக்கிறது;
யாருடைய அருளால் இது அறியப்படுவதோ,
அது யாது எனில் பிறிதொன்றுமில்லை,
உண்மையில், நிலையான, இரண்டற்ற
பேரான்மாவே என்பது,
அறிவு உதயமாகவே
யாருடைய அருளால் உணரமுடிவதோ
அவரைத் தொழுது நிற்கிறேன்;
என் ஆசான் வடிவத்துத்
தென்முகக் கடவுளைத் தொழுது நிற்கிறேன்.

O

---

* தட்சிணாமூர்த்தி ஸ்தோத்திரம்

ஆதியில் பெயர் வடிவு இன்றி
ஆற்றல் பொதிந்து
வித்துப்போல் அனைத்தும் கரந்து
உள்ளடங்கு பிரபஞ்சம்;
படைப்பின் பின், மாயையினால்,
கற்பனை செய்யப்படும் காலம் இடம்
என்ற சக்தியினால்
பலப்பலவாக, பல்வகை வடிவு வண்ணங்களாகக்
காணக் கிடக்கிறது;
இதனை மந்திரவாதி போல் மகாயோகி போல்
தன் விருப்புறுதி ஒன்றாலே
இங்ஙனம்
வெளியில் தோன்றுமாறு சமைத்தவரைத்
தொழுது நிற்கிறேன்;
என் ஆசான் வடிவத்துத்
தென்முகக் கடவுளைத் தொழுது நிற்கிறேன்.

O

யாருடைய புறநிலை வெளிப்பாடுகள்
மெய்ம்மையின் அடிப்படையில்
மலர்ந்தனவாயினும்,
மாயமானவையாக மாறிக்கொண்டேயிருப்பனவாகத்
தோன்றுகின்றனவோ;
மறை மொழியாம் 'அது நீ' என்பதனை
ஆழ்ந்துணர்வதன் மூலம்
தம்மிடம் அடைக்கலம் புகுவார்க்கு,

பிறப்பிறப்பு வட்டாரத்திற்குத் திரும்பி வரவேண்டா
வலி நல்கும்
பிரம்மத்தின் நேரிடை அறிவாம் வரத்தை
அளிப்பவர் யாரோ
அவரைத் தொழுது நிற்கிறேன்
என் ஆசான் வடிவத்துத்
தென்முகக் கடவுளைத் தொழுது நிற்கிறேன்.

O

துளை பல கொண்ட குடத்தினுள்
வைக்கப்பட்ட சுடர் மிக்க விளக்கின்
பெருகு ஒளி துளைகள் வழியே பிறங்குதல்போல்
ஐம்பொறிகள் வழியே
யாருடைய அறிவு,
'நான் அறிகிறேன்' என்ற நினைப்பு வடிவில்
துடிப்பு அதிர்வு கொள்கிறதோ
யாருடைய பேரொளி மன்பதை முழுதும்
விளங்க வைக்கிறதோ
அவரைத் தொழுது நிற்கிறேன்.
என் ஆசான் வடிவத்துத்
தென்முகக் கடவுளைத் தொழுது நிற்கிறேன்.

O

உண்மையிலே வெறுமைகளாக உள்ள
உடம்பு காற்று பொறிகள் என்பவற்றை,
மனம் புத்தி என்பவற்றை,
சின்னக் குழந்தைபோல், கண்மூடிகளாக,
பிழையான வழிகாட்டுதலின் பேரில்
'நான்' என்று தவறாகக் கூறிவருகின்றனர்;
மாயையின் விளையாட்டால் வந்த பெரிய மயக்கம்,
இதனை விரட்டியடிப்பவரைத் தொழுது நிற்கிறேன்
என் ஆசான் வடிவத்துத்
தென்முகக் கடவுளைத் தொழுது நிற்கிறேன்.

O

நமது வெளி உணர்வுகள்
இராகுவினால் மறைப்புற்ற கதிர்போன்று
மறைபட்டுக் . கிடக்க
அகப்புறக் கருவிகள் உள்ளிழுக்கப்பட்டுக் கிடக்க
ஒரு மனிதன் என்ற நிலையில்
கனவிலா ஆழ்பெருந் துயிலில்,
இறுதியான நிறை உண்மையாக இருப்பவர்,
விழித்த பிற்பாடு 'நான் உறங்கினேன்' என்று
நினைவு கூர்ந்து சொல்பவர்
அப்புறம், புறப்பொருள்களை மீட்டும் காண்பவர்
அவரைத் தொழுது நிற்கிறேன்
என் ஆசான் வடிவத்துத்
தென்முகக் கடவுளைத் தொழுது நிற்கிறேன்.

O

விழித்திருத்தல், உறங்குதல், கனவின்றி
நன்கு உறங்குதல் என்ற மாறுதல்களோடு
குழந்தைப் பருவம் காளைப்பருவம் இளமை முதுமை
என்ற பருவங்கள் வழியாக
வற்றாத மெய்யுணர்வு வெள்ளமா இருந்து வரும்
நிலைத்த ஆன்மாவை,
இதயத்தே எப்போதும் தான் இருப்பதை
'நான்' என்று திரைவிலக்கிக் காட்டிக் கொண்டிருப்பதை,
யார் தமது நேய நெகிழ்வால்,
வழிபடுவார்க்குத் தன் சின்முத்திரையால் காட்டுவாரோ
அவரைத் தொழுதுநிற்கிறேன்
என் ஆசான் வடிவத்துத்
தென்முகக் கடவுளைத் தொழுது நிற்கிறேன்.

O

மாயையின் வீச்சின் கீழ் உள்ள
ஒரு மானிடர் என்ற வகையில்,
பவ்வகையாக உள்ள பொருள்கள் கொண்ட இவ்வுலகு
காரணம் விளைவு, உரியோன் உரிப்பொருள்,
ஆசான் மாணாக்கன், தந்தை மகன்
என்றாற் போன்று இங்ஙனம்

ஒன்றோடொன்று பந்தத்தால்
இணைக்கப்பட்டிருக்கிறது
என்று யார் உணர்ந்திருக்கிறாரோ
அவரைத் தொழுது நிற்கிறேன்
என் ஆசான் வடிவத்துத்
தென்முகக் கடவுளைத் தொழுது நிற்கிறேன்.

o

அறிஞர் உண்மை காண்போர் என்ற வகையில்
எவரைக் காட்டிலும் வேறெந்த உயிரும்
மேலாக இல்லையோ,
மண் நீர் தீ காற்று விண் எனவும்
பகலின் தலைவனாம் வெய்யவன்,
மெல்லொளி தரும் தண்மதி,
உயிருள்ள மானிடன் எனவும்
எண்வகை வடிவாக எவர் வெளிப்பட்டுள்ளாரோ
அவரைத் தொழுது நிற்கிறேன்
என் ஆசான் வடிவத்துத்
தென்முகக் கடவுளைத் தொழுது நிற்கிறேன்.

o

உயிருள்ள ஒவ்வொன்றிலும் ஆன்மாவாக
முடிவான மெய்ப் பொருளை,
'தென்முகக் கடவுள் மீதான தோத்திரம்'
விளங்கச் செய்கிறது;
ஆகலின் இதனைக் கேட்டும் நினைத்தும் தியானித்தும்
வருவதனால்
ஒருவன் அனைத்தின் உள்ளார்ந்த பேரான்மாவாம்
பெருமையினை எய்துகிறான்
இணையற்ற தலைமை எய்துகிறான்
அல்லற்படாமல் குறுக்கீடின்றித்
தனிப் பெரும் சித்திகள் எட்டையும்
அடைகின்றான்.
முடிந்த முடிபாம் மெய்ப் பொருள் பற்றிய
நேர்முக அறிவைச் சாதுக்களுக்கு வழங்கும்
அவரைத் தொழுது நிற்கிறேன்.
இறைவன் தான் அவர், பிறவிப் பேரிடர்
நீக்குதல் வல்லோர்
அதோ ஆங்கண் ஆலின் கீழ்
அமர்ந்துள்ள என் ஆசான் வடிவத்துத்
தென்முகக் கடவுளைத் தொழுது நிற்கிறேன்.

O

அதோ பாருங்கள், ஆலின் கீழே முது மாணாக்கர்
இளமை பொலியும் ஆசான் பக்கம்
அமர்ந்திருக்கின்றனர்;
உண்மையில் புதுமை தான் இது
மௌனத்தாலே அவர் கற்பிக்கின்றார்;
மாணாக்கர்தம் ஐயங்களை அதுவே
அகற்றிவிடுகிறது.

O

ஓம் எனும் விழுகிய சொல்லின்
உட்பொருளானவர், அவரைத் தொழுகிறேன்
தனி மெய்யுணர்வே தம் இயல்பாயுள்ளவர்
அழுக்கில்லாமலும் அளவுகடந்த பேரமைதி
உடையராகவும் இருக்கும் அந்தத்
தென்முகக் கடவுளைத் தொழுது நிற்கிறேன்.

O

நிலையான பேரறிவுச் சுரங்கத்தை,
பிறவிப்பிணி மருத்துவரை
எல்லாராலும் தத்தம் ஆசான் என்று
மதிக்கப்படுபவரை
தென்முகக் கடவுளைத் தொழுது நிற்கிறேன்.

O

மேலாம் மெய்ப்பொருளை மௌனத்தால் விளக்குபவர்;
மெய்ப்பொருள் நாடும் வயோதிக மாணாக்கராலும்
வலமிக்க சாதுக்களாலும் சூழப்பெற்றவர்;
இளமை பொலியும் என் ஆசான்
தென்முகக் கடவுளைத் தொழுதுநிற்கிறேன்;
பேரின்ப வடிவு, ஆன்மீக எழில், மலர்ந்த முகம்,
தன்னை உணர்த்தும் நிலை, உடையவர்
அறிவடையாளம் காட்டும் கை உயர்த்தியவர்;
மௌனமான
அண்ணல் ஆசானைப் போற்றிப் புகழ்கிறேன்.

O

3

# அன்னை பவானி : பலமும் உதவியும் *

தந்தை யில்லை எனக்குத் தாயில்லை தோழர் இல்லை
மைந்தன் இல்லை மகள் இல்லை மனைவியில்லை
பேரப் பிள்ளையில்லை
உன்னில் தான் இருக்கிறது எனக்கு ஒரே புகலிடம்
உன்னில் தான் எனக்குப் பலமும் உதவியும்
ஓ, பவானி!

O

அளவிலாப் பெருங்கடலாம் உலக வாழ்க்கையில்
முக்குளித்து நான் நொந்து நடுங்குகிறேன்
அந்தோ, காமம் உடையன் அறிவிலி ஆசை மிக்கவன்
கெடுதித் தளைகளால் பிணிபட்டுள்ளேன் எப்போதும்,
உன்னில் தான் இருக்கிறது எனக்கு ஒரே புகலிடம்
உன்னில்தான் எனக்குப் பலமும் உதவியும்
ஓ, பவானி!

O

---

* பவானி அஷ்டகம்

ஈதல் தியானம் ஆகமம் தோத்திரம்
மந்திரம் இவற்றுக்கு நான் ஓர் அன்னியன்;
வழிபாடு பற்றி அறியேன், நிம்மதி இல்லாதேன்,
உன்னில் தான் இருக்கிறது எனக்கு ஒரே புகலிடம்
உன்னில் தான் எனக்குப் பலமும் உதவியும்
ஓ, பவானி!

O

தாயே, புண்ணி யாத்திரை உயரிய தகுதி
மன அடக்கம், ஆன்ம விடுதலை
கடும் நோன்புகள் பக்தி என ஒன்றும் அறியேன்
உன்னில்தான் இருக்கிறது எனக்கு ஒரே புகலிடம்
உன்னில்தான் எனக்குப் பலமும் உதவியும்
ஓ, பவானி!

O

எனக்குச் சேர்க்கை பாவச்செயலும் தகாத நண்பரும்;
நான் ஓர் அடிமை தீ நினைப்புகட்கும்
தீவினை செய்வார்க்கும்;
தாழ்வுற்றேன் நான் நேர்மையில்லேன் இழிந்தவன்
ஆனேன்,
ஒட்டுறவு எனக்குக் கெட்ட பொருள்களில்,
தேர்ச்சி எனக்குக் கெட்ட பேச்சில்;
உன்னில் தான் இருக்கிறது எனக்கு ஒரே புகலிடம்
உன்னில் தான் எனக்குப் பலமும் உதவியும்
ஓ, பவானி!

O

அயனோ மாலோசிவனோ அறியேன்
இந்திரன் சூரிய சந்திரர் போன்றோர்
எண்ணற்ற கடவுளர்தம்மில்
ஒரு வரையாகிலும் அறியேன், சரண்புகத் தக்கவளே,
உன்னில்தான் இருக்கிறது எனக்கு ஒரே புகலிடம்
உன்னில்தான் எனக்குப் பலமும் உதவியும்
ஓ, பவானி!

O

பூசலில் வருத்தத்தில் வெளிப்புறத்தில் ஆபத்தில்
நீரில் நெருப்பில் வனங்களில் மலைகளில்
பகைவர் சூழலில் என்னைப் பாதுகாப்பவளே
காப்பாற்றுவாய் என்னை;
உன்னில் தான் இருக்கிறது எனக்கு ஒரே புகலிடம்
உன்னில்தான் எனக்குப் பலமும் உதவியும்.
ஓ, பவானி!

O

ஆதரவில்லாதவன் முடியாதவன் துணையில்லாதவன்
நொய்ம்மைக்கு உள்ளானேன் சலித்துப்போனேன்
ஊமையாய்த் தளர்கிறேன்
துயரில் புண்பட்டேன் அடியோடு அழிந்தேன்
உன்னில்தான் இருக்கிறது எனக்கு ஒரே புகலிடம்
உன்னில்தான் எனக்குப் பலமும் உதவியும்
ஓ, பவானி!

O

4

## அருளுவாய் அன்ன பூரணி *

நலம் மருவு தாயே எங்கள் மேல்
நிலையான பேரின்பம் பொழிபவளே,
அழகுப் பெருங்கடல், அஞ்சற்க என்று
வரங்கள் தருபவள்,
தீமையின் கறைகள் யாவையும் போக்கும்
மேலாம் துப்புரவாட்டி,
கண் கண்ட உலகத் தலைவி,
பனிமலை மரபின் மேன்மைக் கொடியே,
புண்ணிய காசியை ஆளும் பேரரசி,
தேவி, அன்ன பூரணி
என்னிடம் கனிவு இரக்கம் கொள்
பிச்சை அருள்.

O

* அன்ன பூர்ணா ஸ்தோத்திரம்

அவளது ஆடை மணிகள் பொதிந்தது
மின்னொளி மிளிர்கிறது
மிஞ்சிய கவின் நலம் மிகுதிப்படுத்தும்
தங்கத் துகில் தரித்துள்ளாள்
அவளது கவின்மார்பில் முத்தாரம்
அமைதி கொள்கிறது
குங்கும சந்தனக் குழம்பில் முழுகி
அவள் திருமேனி
நறுமணம் கமழ்கிறது
நலம் தரு தாயே, நின் திருக்காட்சி
கண்களுக்குச் சாந்தி நல்குகிறது
புண்ணிய காசியை ஆளும் பேரரசி,
தேவி, அன்ன பூரணி,
என்னிடம் கனிவு இரக்கம் கொள்
பிச்சை அருள்.

O

யோகப் பேரின்பம் அருள்பவளே,
மாற்றாரை மாய்ப்பவளே
பொருளும் அறமும் நிறைவிப்பவளே,
நீ ஒளியின் அலை,
வெங்கதிர் மதி தீ சுடரின் வெள்ளம்,
உலகம் மூன்றும் புரப்பவளே,
வேண்டிய நலம் பொருள் குவிப்பவளே,
புண்ணிய காசியை ஆளும் பேரரசி,
தேவி, அன்னபூரணி,
என்னிடம் கனிவு இரக்கம் கொள்
பிச்சை அருள்.

O

கௌரி, உமையாள், சங்கரி, குமாரி,
புனிதப் பனிமலைக் குகையில் குடியிருப்பவளே,
மாமறை நூல்களின் பொருளை விளக்குபவளே,
விடுதலை வாயிலைத் திறக்கவல்ல
ஓம் எனும் அனுபூதி மொழியின்
ஒருதனி வடிவே,
புண்ணிய காசியை ஆளும் பேரரசி,
தேவி, அன்ன பூரணி,
என்னிடம் கனிவிரக்கம் கொள்
பிச்சை அருள்.

O

காணப்படுவன காணப்படாதன ஆகிய பலவகை
உலகுகளைத் தாங்குபவளே
வையத்தை மணிவயிற்றில் கொண்டவளே
இந்த உலகில் நான் ஆடும்
பாவைக் கூத்தின் கயிற்றினைத் துண்டிப்பவளே
ஞானமாம் விளக்கை ஏற்றி வைப்பவளே
நின் தலைவன் சிவனின் நெஞ்சிற்கு
உவகை கொணர்பவளே
புண்ணிய காசியை ஆளும் பேரரசி,
தேவி, அன்ன பூரணி,
என்னிடம் கனிவிரக்கம் கொள்
பிச்சை அருள்.

O

பகவதி, உலகின் கோப் பெருந் தாயே,
அன்னை அன்ன பூரணி, ஓங்குயர் தேவி,
அருட்பெருங்கடலே,
நின் கூந்தல் கற்றை முழந்தாள் படிந்து
ஆற்று ஒழுக்கென்ன சிற்றலை வீசி
நீல மணிபோல் மிளிர்கின்றது
எங்களுக்கு உணவும் பேரின்பமும்
எல்லா நற்பேறும் எப்போதும் நல்க
ஆர்வமிக்கவளே
புண்ணிய காசியை ஆளும் பேரரசி,
தேவி, அன்ன பூரணி,
என்னிடம் கனிவிரக்கம் கொள்
பிச்சை அருள்.

O

அகரம் முதல் நெடுங்கணக்கெல்லாம்
விளக்கி யருள்பவள் நீ
மன்பே ரண்டங்களின் ஒழுங்கமைதி
பரு நுண் உலகுகள் யாவற்றுக்கும்
தாயே, அவற்றின் தலைவி!
மூவுலகுக்கும் இறைவி,
படைப்பு காப்பு கலைப்பு என்ற அலைகளைத்
தன்னுள் அடக்கியுள்ளவளே,
நிலைத்தவள் காரணங் காணமுடியா மூல காரணம்,
ஊழிக்காலப் பேரிருள் நீயே,
மானிட ஆசையைக் கனலச் செய்பவள்,
அவர்களுக்கு உலகில் நலன்கள் வழங்குபவள்,
புண்ணிய காசியை ஆளும் பேரரசி,
தேவி, அன்ன பூரணி,
என்னிடம் கனிவிரக்கம் கொள்
பிச்சை அருள்.

வலக் கையகத்து
வைர மணிப்பொற் கரண்டி பிடித்து
இடக் கையகத்து
சுவைமலி உணவுப் பாத்திரம்
ஏந்தியிருப்பவள்,
நற்பேறு கொடுப்பவள் வழிபடுவாரின்
விருப்புகள் நிறைவேற்றுபவள்
நின் கண்ணிமைப்பினில் அவர்களின்
ஆக்க நலங்கள் அனைத்தையும் கொணர்கிறாய்
புண்ணிய காசியை ஆளும் பேரரசி,
தேவி, அன்ன பூரணி,
என்னிடம் கனிவிரக்கம் கொள்
பிச்சை அருள்.

O

நினது பேரொளி
சூரிய சந்திர அக்கினிகளை விட
ஆயிரம் மடங்கு ஒளிவீச்சு உடையது,
நிலவொளி என்பது நினது உதடுகளின்
நிழலன்றி வேறென்ன?
நின் செவி அணிகலன்கள்
இருகதிர், நெருப்பு என
ஒளி உமிழ்கின்றன,
பெரும்பேரரசி, நின் நாற்கரங்களில்
மணிமாலையும் ஏட்டுச் சுவடியும் கயிறும்
தோட்டியும் கொண்டிருக்கின்றாய்,
புண்ணிய காசியை ஆளும் பேரரசி,
தேவி, அன்ன பூரணி,
என்னிடம் கனிவிரக்கம் கொள்
பிச்சை அருள்.

O

போராண் மரபைப் புரந்து வருபவளே,
கொஞ்சமும் அஞ்சாத்
துணிவு அளிப்பவளே,
எவ்வெவர்க்கும் ஆதரவளிக்கும் அன்னை,
ஈறில்லாத இரக்கக் கடலே,
நொடிப் பொழுது அளவில் விடுதலை
தரவல்லவளே,
நிலையாம் நன்மை நல்குபவளே
சிவனின் நலம் பேணுபவளே
உடல்நோய் யாவும் தீர்த்தொழிப்பவளே
புண்ணிய காசியை ஆளும் பேரரசி,
தேவி, அன்ன பூரணி,
என்னிடம் கனிவிரக்கம் கொள்
பிச்சை அருள்.

O

அன்ன பூரணி, உன்னிடம் இல்லாத தில்லை,
நீ சங்கரன் நெஞ்சம் சிலிர்க்க வைக்கிறாய்
பார்வதி, எனக்குப் பிச்சை அருள்
குறையிரந்து வேண்டுகிறேன்
ஞானம் நல்கு, யாவினும் மேலாய்ப்
பற்றறுதி நல்கு.

O

என் தாய் இறைவி பார்வதி;
என்தந்தை எவரும் எதிர்நிற்க முடியா
இறைவன் சிவன்;
நின் அடியார் என் கேளிர் கிளைஞர்;
மூவுலகும் என் தாயகம்.

O

5

## திருமால் காக்க *

இறுமாப்பினின்றும் என்னைக் காப்பாய், திருமாலே,
என் அலைதுள்ளும் மனத்தைத் தடுத்து நிறுத்து
தோற்றமாம் வாழ்க்கையெனும் கானல் நீருக்கு
என் தாகத்தை ஆறிவிடச் செய்
மன்பதைபால் நான் அன்பு செய்ய
இறையவனே கனிவு காட்டு
உலக வாழ்க்கைக் கடலினின்றும் மீட்டு விடு.

O

---

* விஷ்ணு ஷட்பதி

உன் அடித் தாமரையை வணங்குகிறேன்
அதன் தேனே புனித கங்கை,
அதன் நன்மணமே மெய்யறிவுப் பேரின்பம்;
திருமகள் மணவாளன் திருவடி வணங்குகிறேன்
உலக வாழ்க்கையின் அச்சத்தையும் பெருந்துயரையும்
அது வென்று அடக்குகிறது.

●

இருமைக்கு அடிமையில்லை நான் என்றபோதும்
இறையவனே,
உண்மை யாதெனில்
நான் உன் ஆளாக இருக்கிறேன்
நீ என் ஆள் இல்லை
அலைகள் கடலின் அங்கமாகலாம்
கடல், அலைகளின் அங்கம் அல்லவே?

கோவர்த்தன மலை தாங்கியவனே,
அசுரர் கணத்தை அழித்தவனே,
எல்லாம் வல்லானே ஞாயிறு திங்களாம்
விழிகள் உடையாய்;
பேருலக மன்னவனே, உனது திருமேனிக் காட்சி
உலகின் மாயத் தோற்றத்தைப் போக்குகிறது என்பதை
யாராலும் ஐயுற முடியுமா?

○

ஆளும் கோமானே, உலகுக்கு ஊறு வாராமல்
உன் பல்வகைப் பிறப்பால் காத்துவந்துள்ளாய்
இறையவனே, என்னை மீட்க நீ வருவாயாக
உலகியல் தீயினால் சூடுண்டேன்
காப்பாய் நீயே.

○

கோவிந்தா, தாமோதரா,
ஈறிலாப் பண்புகளும் மேலான பேரழகும்
உடையவனே
உலகாசை என்கின்ற கடல் கடைந்தாய்,
என்னிடம் கனிவு கொள்வாய்,
என்னகத்துள்ள கழிபேரச்சம் அழித்தொழிப்பாய்.

O

நாராயணா, எப்போதும் அருள் நிறைந்தோன் நீ,
நான் உன் அடியிணை அடைந்தேன்;
என் வாய்த் தாமரையில் தேனீயாக
இந்தப் பாசுரம் ஆறும் இருப்பனவாக!

O

6

## வாழிய தெய்விக கங்கை

வானகத் தலைவி பகவதி கங்கை
உலகம் யாவையும் இரட்சிப்பவளே,
மெல்லலை வீசி விளையாட்டாக நீ
ஓடிவருகிறாய்
சிவனார் செஞ்சடை அலைந்து திரிகிறாய்
மாசிலாய், என் மனம்
நின்னடித் தாமரையில்
என்றும் இருக்க அருள் பாலிப்பாய்.

O

பாகீரதியே அன்னையே சுகம் அளிப்பவளே
நின் நடையின் பெருமையை நன்னூல் பலவும்
கொண்டாடுகின்றன
ஆனால், அந்தோ, நின் பெருமைகள்
எதுவும் அறியேன்
இரக்க அன்பின் வடிவானவளே
நானோர் மடவன்
எனக்கு மீட்சி அருளுவாய்.

O 

இறைவன் திருமால் சேவடியிருந்து
சிற்றலை வீசிப் பாய்ந்து வருகிறாய்
உறைபனி வயிரம் குளிர்மதி இவற்றினும்
வெண்ணிறம் கொண்டு படர்ந்து வருகிறாய்

அன்னை கங்கையே,
பொல்லா வினைகள் என்மேல் கனத்துப்
பெருஞ்சுமையாக அழுத்தும் அவற்றைப்
போக்கி அருளுவாய்
உலகியல் என்ற கடலிடை என்னைத்
தாங்கிக் கொண்டு போதல் அருள்வாய்
புத்துணர்ச்சி தரும் நின் புனலைப் பருகினோன்
உண்மையில் மிக மிக உயர்ந்ததைச்
சுவைத்தோன் ஆவன்
அன்னை கங்கையே உன்னைத் தொழுதோன்
ஒருகாலும் யமனால் தொடப்பட மாட்டான்.

O

கங்கையே ஜானவி
பாவிகள் தம்மை மீட்கும் அருளே
உடைகற்களின் மேல் ஓடிவருகிறாய்
வீடுமன் தாயே, ஜன்னுவின் மகளே,
நீயே தீமையை வெல்லும் பெருந்திறல்
உடையை
உண்மையிலே நீ உலகம் யாவிலும்
அருட்பேறு உடையை.

O

வேண்டிய கொடுக்கும் வானகமரம் போல்
மானிடர் வேட்கும் வரங்கள் தருகிறாய்
உன்னைத் தொழுதோன் பின்பு ஒரு காலும்
துயரம் அடையான்
எல்லை யொன்றில்லாக் கடலுடன்
துள்ளி விளையாடும் கங்காதேவி
வியந்தவாறு விண்ணக மடவார் உன்னை
ஒசிந்த பார்வையில் பார்த்தவா றுள்ளனர்.
உன் அருளாலே உன் புனல் ஆடினோன்
மறுபடி ஒரு தாய் வயிறு புகுதல் இல்லை
வாழ்க்கை முழுதும் அவன் செய் பாவங்கள்
மொத்தமாக அழிந்துபோகின்றன
மாளும் பொழுது விதிக்கப்படுகிற
கட்டளை யெல்லாம் ஒழிந்துபோகின்றன
ஜானவி, கங்கையே,
பெருமை என்பதே நீ தான்
ஆகையால்
உலகுகள் யாவும் உனக்கு அளிக்கின்றன
மதிப்பும் புகழும்.

O

ஒளிவண்ணமாக ஜானவி நின்புனல்
மின்னுகின்றது
உன்னை வழிபடுவோரைக் கனிவன்புடனே
கண்ணோட்டம் செய்கிறாய்
தேவர்தம் வேந்தன் இந்திரன் தானும்
தன் மணிமுடி தாழ நின் அடிபணிகின்றான்
சுகம் அளிப்பவளே, நற்பேறு கொணர்வோய்,
நின் தொல்லடியார்க்குத் துணை நிற்பவளே,
வாழிய நீயே !

O

என் நோய்கள் யாவும் ஒழிப்பாய்
பகவதி, கங்கை!
என் தொல்லைகள் பாவம் துயர்கள் எல்லாம்
களைவாய் நீயே
என் அடங்கா ஆசைகள் அனைத்தையும்
நசுக்குக நீயே
எல்லா உலகிலும் மிக உயர் தேவி,
நிலமாம் தாயின் விலைமதி மிக்க
முத்தாரம் நீ,
எனக்கு இவ்வுலகில் நீ தான் புகல் ஆதரவு.

O

மேல் உலகத்தவர்க்கும் உவகை தருபவளே,
பேரின்பப் பிழிவே', துன்புறுவோரால்
துதிக்கப்படுவோய்,
நின்னருள் நேயத்தை என்மேல் பொழிவாய்;
நின் கரையைத் தன் உறையுளாக் கொண்டோன்
உண்மையில் திருமால் உலகின் வாழ்வோனாவன்.

O

நின் தண் புனலில் ஒரு மீனாகவேனும்
ஆமையாயேனும் இருக்க விரும்புவேன்,
நின் கரைப் பாங்கரில் ஒரு பல்லியாகவேனும்
வாழ விரும்புவேன்;
நின் புனித ஓட்டத்தினின்று
மிகு தொலைவு தள்ளி
ஒரு பேரரசனா இருப்பதை விடவும்
நின்னருகே ஓர் எளிய பணிமகனாக
இருக்கவே விழைவேன்.

மன்னுலகின் நல் அரசியே
முனிவன் மகளே நலம் தரும் தாயே
ஓடிப்பாயும் தேவதையே மெய்யான இறையே
இந்த கங்கை அருட்பாவைப் பாராயணம் செய்வோர்
வெற்றியே பெறுவர் ஒவ்வொரு செயலிலும்,
என்பது திண்ணம்.

O

எவன் தன் அன்னை கங்கையை
நெஞ்சில் இருத்தி நேசிக்கிறானோ
அவன் மிகமிக எளிதா
உய்கதி அடைவான்
அன்னை மீது பாடிய இந்த
இனிய சந்தப் பாடல்
விழுப்பமாய் உயர்ந்த மன நிலைமையினில்
சிந்தை கிறங்கச் செய்யவல்ல
சிற்றலை ஓசைச் சந்த யாப்பில்
சங்கரன் அடியன் சங்கரன் பாடினான்;
எதுவும் இதனை விஞ்ச முடியாது
விருப்புகள் யாவும் நிறைவேற்றுவது
செவிகட்கு இனியது நாவிற்கு அமிர்தம்;
புலனின்பங்களுக்குத் தன்னைக் கொடுத்த
நிலையில்லாத மானிட மடவோய்,
நெடுக நிலைத்த நலன் பெறற் பொருட்டு
நாடொறும் இதனைப் பாராயணம் செய்,

O

# 7

## பிழை பொறு தாயே *

மந்திரம் யந்திரம் அந்தோ அறியேன்
வழிபாடு தியானம் அவையும் அறியேன்
உன்னைப் புகழ்வது எப்படி எனவும் அறிகிலேன்
வழிபாட்டுக்குரிய கிரியைகளோடு
முத்திரை காட்டும் மரபும் அறியேன்
குறையிரக்கவும் தெரிகிலன்
ஆனால் இஃது ஒன்று அறிவேன்
நின் நிழல் நாடிச் சார்வோர்
யாவரேயாயினும்
தம் துன்பம் அனைத்துக்கும் முடிவிடம் காண்பர்;
இதனை மட்டும் அறிவேன் அம்மா !

o

---

* தேவி அபராத க்ஷமாபண ஸ்தோத்திரம்

மறைநூல் கிளக்கும் ஆணைகள் அறியாது
சொத்து செல்வம் கொஞ்சமும் இன்றி
செய்வதறியாமையும் சோம்பலும் சேரவே
செய்தற்கு உரியது எதுவும்
செய்யாதொழிந்தேன்
ஆகவே கீழ்நிலையுற்றேன்
தாயே, மானிட இனத்தின் காவல்தேவே
வரமளிப்பவளே என் பாவங்களை மன்னிப்பாயே;
மோசமான மகன் சிலவேளை பிறத்தல் உண்டு
ஆனால் அன்பிலாத ஒரு தாயைக்
காணமுடியாதே!

O

அன்னையே இங்கே இந்த உன் உலகில்
சூதுவாதில்லா உன் மைந்தர் பலருளர்
அவர்களுக்குள் நிம்மதியில்லாதவன் நான்;
எனவே உன்னை விட்டு நான்
புறம் சென்றதில் வியப்பு ஒன்றும் இல்லை,
ஆனால் என்னை நீ விடுத்து அப்பாற்சென்றது
உண்மையில் நிகழத் தகுவதோ?
மோசமான மகன் சிலவேளை பிறத்தல் உண்டு
ஆனால் அன்பிலாத ஒரு தாயைக்
காண முடியாதே!

O

உலகின் அன்னையே, நீ என் சொந்த அன்னை!
உனக்கு நான் பணிந்ததில்லை
பொன்னோ மணியோ கொடுத்ததுமில்லை,
இருப்பினும் உன் அன்பு ஒப்பிட ஒண்ணாதது;
மோசமான மகன் சிலவேளை பிறத்தல் உண்டு
ஆனால் அன்பிலாத ஒரு தாயைக்
காண முடியாதே!

O

நூல்கள் விதித்துள ஆணைகள்
நடத்தை முறைகள்
என்பவற்றால் மனம் குழம்பி
ஒளிரும் கடவுளரை ஒவ்வொருவராக
நான் புறக்கணித்தேன்
இப்பொழுது என் வாழ்வு
நடுக் கோட்டினைக் கடந்து வந்துவிட்டது;
தாயே நீ நின் இரக்கத்தை நிறுத்திக்
கொண்டு விட்டால்
எய்த்தவன், ஆதரவிலாதவன், அடைக்கலம் நாடி
எங்கு நான் ஓடுவேன்?

O

நின் மந்திரப் பெயரை ஒருவன்
செவியில் ஒலிக்கக் கேட்டிருந்தாலும்
நாயூன் தின்பவனாயினும் அவனே
தேன்சுவை வாசகம் பேசத் தெரிகுவன்;
யாசகன் ஆயினும் அவன்தான்
கணக்கிட முடியாச் செல்வம் பெற்று
அச்சமில்லாது நெடுநாள் வாழ்குவன்.

O

உன்னைத் துணைவியாய்ப் பெற்றதனால்தான்
சிவானர் நிகரிலா இறைவன் ஆனார்-
ஆடையிலாதவர் ஈமச் சாம்பலால்
அருவருப்பானவர்
சடையாய்ப் போன தலைமுடி, கழுத்தைச் சுற்றி
நச்சரவங்கள்-
அத்தகையவர்
எல்லா உயிர்க்கும் ஈசன் ஆனார்!

தாயே, செல்வ வளங்கள், நற்பேறு, உய்தி,
கேட்கவில்லை நான்;
இன்பமோ அறிவோ வேண்டவுமில்லை;
இஃது ஒன்றே என்றன் வேண்டுதல்-
உயிர்மூச்சு என்னைக் கைவிடுங் காலை
அத்தருணத்தும் நின் புனிதப் பெயரை நான்
புகலல் வேண்டும்.

O

அன்னையே, சடங்குமுறைப்படி,
வேள்விக்குரிய அட்டவணைப்படி
உன்னை நான் வணங்கியதில்லை;
பலப்பல எனது பாவச் செயல்கள்;
பகலும் இரவும் வறுமொழி பேசிக்
காலங் கழித்தேன்
உனை நினைத்தேனில்லை,
தெய்வத் தாயே, இவ்வளவு நொய்ந்தவனுக்கு
மிகச்சிறு கருணை காட்டுவையாகில்
அது நின் பெருமித நிலைக்கு ஒப்பதேயாகும்.

O

கொற்றவை! அருட்கடலாம் இறைவி!
துயரத்தால் பிணிக்கப்பட்ட நான்
நின்னைத் தொழுதேன்,
உள்ளொன்று வைத்து வெளியொன்று பேசுவோன்
என நினைத்து விடாதே;
பசிதாகத்தால் பற்றப்பட்ட ஒரு குழந்தை
தன் தாயைத்தானே விடாது நினைக்கும்?

O

வையகத்தின் தாயே,
நிறைந்த நின் இரக்கத்தை
என்னிடம் காட்டுவையாயின்
அதுதானும் வியத்தற்குரிய ஒன்று ஆகுமா?
தன் மகன் தவறுகள் ஆயிரம் இழைப்பினும்
அவனை வெறுக்கும் ஒரு தாயும் உண்டா?

O

இந்த உலகனைத்திலும்
எனக்கு நிகரான பாவி ஒருவன்
இருக்கவே மாட்டான்
பாவத்தை எரிப்பதற்கு
உன்னைப் போல் ஒரு சக்தி எங்குமே இல்லை;
மாதேவி, இதனை உளங்கொண்டு'
எது தகுமோ அதனை நடத்துக.

O

8

## சிவனை வணங்குவோம் *

ஆருயிர்க்கெல்லாம் தலைவன்
யாவும் வல்ல ஒருவன்
தீவினை தீர்ப்பவன்
அவனை நான் இதயத்து இருத்துகிறேன்
எல்லாராலும் துதிக்கப் படுபவன்
சடைமுடியினில் கங்கை மெல்ல ஒலித்தவாறு
அலையப் பெற்றவன்
சிவன் பெருந்தேவன் தனக்குவமை இல்லாதோன்
காமத்தை வென்றவன்
அவனை நான் இதயத்து இருத்துகிறேன்.

O

---

* வேதசார சிவ ஸ்தோத்திரம்

ஓங்குயர் கோமான் கடவுளர் கடவுள்
அசுரரை அழிப்போன்
அவனை நான் புகழ்கிறேன்
எல்லாவற்றிலும் உள்ளுயிர் ஆனவன்
உலகத் தலைவன் பொடி பூசு மெய்யன்
வெய்யோன் மதி தீ என்ற
முக்கண் உடையான்
சிவன் இன்பமானவன் ஐந்து முகத்தோன்
அவனை நான் புகழ்கிறேன்.

O

புனித மலைகளின் அரசன் கணங்களின் நாதன்
நீல மிடற்று இறைவன்
அவனை நான் வணங்குகிறேன்
முக்குணம் கடந்து திகழ்பவன்
தனி முதல் காரணன் சுடரொளி வண்ணன்
நீறாடு மேனியன் நல்லேற்று ஊர்தியன்
சிவன் ஐம்முகத்து ஒருவன் பவானி கேள்வன்
அவனை நான் வணங்குகிறேன்.

O

உமையவள் அன்பன் இனியவன்
நெற்றியில் பிறை அணி உடையோன்
மாதேவா முத்தலை வேலேந்தி சடைமுடி தரித்தோய்
பேருலகனைத்தும் விரவி உள்ளிருப்போய்
வான்பேருருவே
அண்ணல், என்றும் பூரணா, எங்களுக்கு
அருள்புரி அருள்புரி இறைவா

O

பரமான்மா அவன், தன்னைத்தவிர ஒப்பேதும்
இல்லான்
அவனைப் பணிகிறேன்
உலகின் காரணன் யாரோ,
ஆதி பகவன், உருவும் செயலும் இலா உயர்
ஓம் எனும் மொழியால்
அடையப் பெறுவோன் யாரோ,
யாரிடமிருந்து உலகம் பூத்ததோ
யாரால் உலகம் இருந்து வருகிறதோ
யாருள்ளே அதுகலந்து விடுகிறதோ
அவனை—சிவனை—வணங்குகிறேன்.

O

நிலனோ நீரோ நெருப்போ காற்றோ
விண்ணோ அல்லன்
அவனை வணங்குகிறேன்
உறக்கமில்லாதவன்
ஆயினும் களைப்பு என்பதே அறிந்திடாதான்
வெம்மை குளிர் என்பன கடந்தோன்
நாடு இல்லாதோன் வீடு இல்லாதோன்
உருவமில்லாதவன் முத்தொழில் நாயகன்
சிவன் அவன்
அவனை நான் வணங்குகிறேன்.

O

பிறவாதவன் என்றுமிருப்பவன் எல்லாக்
காரணங்களுக்கும் காரணன்
அவனை நான் புகலடைகின்றேன்
துரியன் இருளுக்கு அப்பால் உள்ளவன்
மங்கலமானவன் தானாக இருப்போன்

ஒளிகளின் ஒளி
தொடக்கமும் முடிவும் இல்லாதவன்
மேலாம் துப்புரவாளன் தனக்கு ஓர்
ஈடு இல்லாதவன்
அவனை நான் புகலடைகின்றேன்.

O

மன்பேருலகே நின் மேனியாய் விளங்க
எங்கும் பரவிய உணர்வே
உனக்கு வணக்கம் வணக்கம்
மெய்யுணர்வு பேரின்பம் ஆயவற்றின்
மொத்த வடிவமே,
உனக்கு வணக்கம் வணக்கம்
யோகத்தாலும் மூச்சு அடக்கலாலும்
அடையமுடியா ஒருவனே,
உனக்கு வணக்கம் வணக்கம்
திருமறை காட்டும் ஞானத்தால் மட்டுமே
அறியப் படுவோன்
உனக்கு வணக்கம் வணக்கம்

O

இறைவா எங்குமுள உயிரே
முத்தலைவேல் கைக்கொண்டோய்
பெருந்தேவா களிப்பு அருள்பவனே
மேலாம் அண்ணல் முக்கட் சிவனே
ஒளிவடிவே உமையவள் துணையே
அரக்கரை அழிப்போய்
காமத்தைக் கொல்வோய்
உன்னையன்றி யாம் வேறெவ்ரையும்
நினையோம் மதியோம்
துதியோம் இறைவா

O

மகிழ்வளிப்பவனே இரக்க முள்ளவனே
யாவும் வல்லோய்
கௌரியின் நேசா எல்லா உயிர்க்கும்
இறைவா
காசி மன்னவா நீயே நனிஉயர் மேலோன்
இரக்கத்தால் நெகிழ்ந்து இவ்வுலகத்தை நீ
எடுக்கிறாய் வளர்க்கிறாய் அழிக்கிறாய்.

O

அண்ணலே ஆதி காரணனே
மதனனை மடிப்போய்
உன்னிடமிருந்தே இவ் வையம் பிறந்தது
அருளாளா அனைவர்க்கும் தலைவா
உன்னிலே தான் இவ் வையம் உய்கிறது,
பெருமான் சிவனே உயிருள்ளன இல்லன
என்பவற்றால் உன்னை நீ
வெளிக் காட்டுகிறாய்
இறுதியில் யாவும் உன்னிலே
ஒடுங்கி விடுகின்றன.

O

9

## இரட்சிப்பாய் மாதேவா *

பெருந்தேவா பிறைவிளங்கு முடித்தலையோய்
இனிமை சேர்ப்போய்
மதவேளை மாய்த்தவனே முத்தலை வேலேந்தி
அசையா நிலையே இமயத் தலைவா
கொற்றவை கேள்வா உயிர்க்குலக் காவலா
அஞ்சுவார் அருந்துயர் எல்லாம் சிதறடிப்போனே,
இடர்மலிந்த இவ் வுலகாம்
தடம் இல்லாக் காட்டினிலே
துணையேதும் இல்லாதேன் இரட்சிப்பாயே.

O

* சிவ நாமாவளி ஸ்தோத்திரம்

பார்வதி நெஞ்சுக்கு இனியவனே, பிறைசூடிப் பெருமானே
சீவர்களின் காவலனே கணத் தலைவா
மலைமகளின் இன்துணையே
வாமதேவா தானே நிலையானோய் உருத்திரனே
வில்லேந்தி
இடர்மலிந்த இவ் வுலகாம்
தடம் இல்லாக் காட்டினிலே
துணை யேதும் இல்லாதேன் இரட்சிப்பாயே.

O

நீல மிடற்றவனே இறையவனே
காளைக் கொடி உடையவனே
ஐம்முகத்தோய்
உலகுகளின் பெருந்தலைவா,
காப்பாகப் பாம்புகளை அணிந்தவனே
நலம் சேர்ப்பவனே,
சிவனே, உயிர்த்தலைவா, பார்வதி கேள்வா
இடர்மலிந்த இவ்வுலகாம்
தடம் இல்லாக் காட்டினிலே
துணையேதும் இல்லாதேன் இரட்சிப்பாயே.

O

பேருலகின் கோமானே சிவனே இனியவனே
தேவதேவா
கங்கை முடிதரித்தோய்
கணங்களின் நாயகனே
அரனே உயிர்த் தலைவா
இடர் மலிந்த இவ்வுலகாம்
தடம் இல்லாக் காட்டினிலே
துணையேதும் இல்லாதேன் இரட்சிப்பாயே.

O

காசிக்கு அரசே எரிகாட்டின் மன்னவனே
மாவீரா தக்கனின் வேள்வியைச் சிதைத்தவனே
எங்கெங்கும் பரவியுள்ளோய்
கணங்களின் அதிபதி, எல்லாம் அறிந்தவனே
ஒவ்வொரு நெஞ்சத்தும் தன்னந் தனித்து
உறைவோனே இறையவனே
இடர்மலிந்த இவ்வுலகாம்
தடம் இல்லாக் காட்டினிலே
துணையேதும் இல்லாதேன் இரட்சிப்பாயே.

O

நலம் அளிக்கும் நாயகனே அருள்வடிவே மாதேவா
ஆகாயம் தலைமுடியாய் உடையோனே
நீல மிடற்றவனே குழுத்தலைவா!
மேனியெலாம் வெண்பொடியாய் விளங்குவோனே
மானிடத் தலை ஓடுகளை மாலையாய் மிலைந்தோனே
இடர்மலிந்த இவ்வுலகாம்
தடம் இல்லாக் காட்டினிலே
துணையேதும் இல்லாதேன் இரட்சிப்பாயே.

O

கயிலை மலை வாழ்வோனே காளை வாகனனே
காலனை வென்றவனே முக்கண்ணா
மூவுலகின் மன்னவனே
நாரணனுக்கு அன்பனே காமத்தைக் கொன்றோனே
சக்திக்கு நாதனே,
இடர்மலிந்த இவ்வுலகாம்
தடம் இல்லாக் காட்டினிலே
துணையேதும் இல்லாதேன் இரட்சிப்பாயே.

O

மன்னுலகின் இறையவனே
அனைத்துயிர்க்கும் புகலிடமே
எல்லையில்லா வடிவங்கள் ஆனவனே
மன்பதையின் ஆருயிரே நற்குணங்கள்
தன்னிடத்தே அமைதிபெறும் தகையவனே
எல்லாரும் பணிந்தேத்தும் அருள்மிக்கோய்
ஏழைகளின் நண்பனே,
இடர்மலிந்த இவ்வுலகாம்
தடம் இல்லாக் காட்டினிலே
துணையேதும் இல்லாதேன் இரட்சிப்பாயே.

O

10

## மன்னிப்பாய் மாதேவா *

செய்கைகளால் வரும் பயன்மேல் ஆசை வைத்ததனால்
முந்திய என்றன் பிறவிகளின் பாவங்களால்-
இந்தப் புவியில் ஒளியை நான் பார்க்கு முன்பே,
அன்னையின் வயிற்றில் கிடக்கும் பொழுதே
நான் தண்டிக்கப்பட்டேன்
அங்கே அசுத்தங்களின் இடையே நான்
கொதிக்க வைக்கப்பட்டேன்.
அன்னை வயிற்றில் இருக்கும் குழவியை
அலைக்கழிக்கும் வேதனையை யாரே
வருணிக்க முடியும்?
ஆகலின் சிவனே மாதேவா இனியவனே
உன்னைத் துதிக்கிறேன், என்னை
வரம்பிகந்த என் வினைகளுக்காக
மன்னிப்பாயே.

○

* சிவ அபராத க்ஷமாபண ஸ்தோத்திரம்

குழந்தைப் பருவத்தில் என் வேதனை
முடிவுக்கு வரவே யில்லை
என் மேனி கசடு போர்த்திருந்தது
தாயின் மார்புக்கு அவாக்கொண்டிருந்தேன்
எனது உடம்பின் மேலும் உறுப்புகள் மேலும்
எனக்கு ஆதிக்கம் இல்லை
இடர் தரும் ஈக்கள் கொசுக்கள்
என்னை விடாது தொடுத்தன
பகலும் இரவும் பலவகைத் தொல்லைகள்
தந்த வேதனையால்
சிவனே, உன்னை மறந்து கதறினேன்.
ஆகலின் சிவனே மாதேவா, இனியவனே
உன்னைத் துதிக்கிறேன், என்னை
வரம்பிகந்த என் வினைகளுக்கு
மன்னிப்பாயே.

O

இளமைப் பருவத்தில் ஓசை காட்சி சுவை பரிசம்
நன்மணம் ஆகிய நச்சு அரவங்கள்
எனது உயிராதாரங்களைச் சுற்றிக் கொண்டன
தெள்ளி உணரும் அறிவைக் கொன்றன
சொத்து பிள்ளைகள் இளமைசால் மனைவி
இந்தச் சுகங்கள் என்னைத் தம்வசம் ஆக்கின.
அந்தோ என்நெஞ்சம் இறை நினைப்பு இழந்து
செருக்கு இறுமாப்பில் பூரித்து இருந்தது,
ஆகலின், சிவனே மாதேவா இனியவனே
உன்னைத் துதிக்கிறேன், என்னை
வரம்பிகந்த என் வினைகளுக்கு
மன்னிப்பாயே.

O

இப்போது எனது வயதான காலத்தில்
என் புலன்கள் தீர்மானித்தல் செயலாற்றுதலில்
ஆற்றல் இழந்தன
யாக்கை முற்றும் வாழ்க்கை இழக்கவில்லையெனினும்
வலிமை குறைந்து பலவாம் இடும்பை
பாவம் நோய் இழப்புகளால்
தள்ளாமை அடைந்தது.
ஆனால் இப்போதும் என் மனம்
சிவனைத் தியானம் செய்தல் இன்றி
வீணான ஆசைகள், உள்ளீடற்ற மயக்குக்ளின்,
பின்னே ஓடுகிறது.
ஆகலின் சிவனே, மாதேவா இனியவனே
உன்னைத் துதிக்கிறேன், என்னை
வரம்பிகந்த என் வினைகளுக்காக
மன்னிப்பாயே.

O

நூல்கள் விதித்துள்ள கடமைகள்
நெருக்கடியானவை, மறைபொருளானவை;
எனக்கு இப்போது தூரத்தே உள்ளன.
பிரம்மம் அடையும் சாதனமாகப் பிராமணர்க்கு
வேதக் கட்டளைகள் பற்றி நான் எப்படிப்
பேசுவேன்?
ஆசானிடம் மறைகள் கேட்டல், அவரது
அறிவுரை வழியே ஆராய்ந்துபார்த்தல்,
என்பவற்றின் பொருளைக் கூரறிவால்
இன்னமும் நான் நன்குப் புரிந்துகொள்ளவில்லை.
இங்ஙனம் இருக்க, இடையீடின்றி
மெய்ப்பொருட் சிந்தை பற்றி நான்
எப்படிப் பேசுவேன்?

ஆகலின் சிவனே மாதேவா இனியவனே
உன்னைத் துதிக்கிறேன். என்னை
வரம்பிகந்த என் வினைகளுக்காக
மன்னிப்பாயே.

O

ஒரு நாளாவது பொழுது புலருமுன் நீராடி
கங்கையினின்றும் தண்புனல் கொணர்ந்து
உன் மேலாம் மேனியை நான்
நீராட்டவில்லை;
அடர் காடுகளிலிருந்து நல்ல வில்வ இலைகளை
உன் வழிபாட்டுக்குக் கொண்டுவரவில்லை,
வாவிகளிலிருந்து மொட்டவிழ் தாமரைப்
பூக்களைத் தொகுத்தது மில்லை;
விளக்குகள் நறுமணப் பொருள்கள் என்று
உன்னை வழிபட வகுத்ததும் இல்லை;
ஆகலின் சிவனே மாதேவா இனியவனே
உன்னைத் துதிக்கிறேன், என்னை
வரம்பிகந்த என் வினைகளுக்காக
மன்னிப்பாயே.

O

உன் திருமேனியைப் பால் தேன்
வெண்ணெய் பிறவும் கொண்டு
முழுக்காட்டியதில்லை,
அதனை நறுமணச் சந்தனக் காப்பால்
புனைந்ததும் இல்லை,
பொன்மலர் நன்மணம் கற்பூரச்சுடர்
படையல் என்பவற்றால் நான் வழிபட்டதில்லை;
ஆகலின் சிவனே மாதேவா, இனியவனே,
உன்னைத் துதிக்கிறேன், என்னை
வரம்பிகந்த என வினைகளுக்காக
மன்னிப்பாயே.

உன் ஒளிவடிவில் நெஞ்சார அன்புவைத்து
மாதேவா, அந்தணர்க்குப் பெருங்கொடைகள்
தந்ததில்லை,
புனித நெருப்பில் வெண்ணெயால் ஆகுதி
ஆயிரம் செய்ததில்லை;
கங்கை நெடுகில் செபமும், வேதம் ஓதலுமாக
நோன்புகள் இயற்றவில்லை;
ஆகலின் சிவனே, மாதேவா இனியவனே,
உன்னைத் துதிக்கிறேன், என்னை
வரயபிகநத என் வினைகளுக்காக
மன்னிப்பாயே.

o

பத்ம ஆசனத்தில் நான் அமர்ந்திருக்க வில்லை
பிராணனைச் சுழுமுனை வழியே 'ஓம்' ஒலி
எழுப்பிச் செலுத்தியதில்லை,
கொந்தளிப்பான மனத்தின் அலைகளை
அடக்கியதில்லை;
மிகப் பெரிதாம் பிரம்மத்தின் இயல்புடன்
சுடர்ந்தவாறு இருக்கும் சாட்சியும் சைதன்யமும்
ஆன ஆன்மாவில்
சுயம்பேரொளியாம் 'ஓம்' ஐக் கலந்துவிடவும்
இல்லை,
எல்லா வடிவிலும் உள்வழிகாட்டியாய்
உறையும் சங்கரனைச்
சமாதி நிலைக்கண் உணர்ந்ததும் இல்லை;
ஆகவே சிவனே மாதேவா இனியவனே,
உன்னைத் துதிக்கிறேன், என்னை
வரம்பிகந்த என் வினைகளுக்காக
மன்னிப்பாயே.

o

தூயன் பற்றிலாதோன் நிருவாணன்,
முக்குணம் கடந்து மயக்கம் இருட்டு என்பன
விட்டுத்
தியானத்தில் ஆழ்ந்திருப்பவன் ஆயினும்
உலகில் உண்மை இயல்பை எப்போதும்
உணர்ந்திருப்போன் ஆன உன்னை,
சிவனே.
ஏக்கறும் நெஞ்சோடு, நலமிக்கதும்
பாவம் களைவதுமான உன் வடிவினைத்
தியானித்த தில்லை,
ஆகவே சிவனே. மாதேவா, இனியவனே
உன்னைத் துதிக்கிறேன், என்னை
வரம்பிகந்த என் வினைகளுக்காக
மன்னிப்பாயே.

O

மனமே, விடுதலை அடையச்
சிவன்பால் முழுதும் ஒருமுகம் ஆகு.
நன்மை கொடுப்போன், உலகங்களின்
அடிப்படையான முழு மெய்ப்பொருள்,
அவனது
தலையினைப் பிறை ஒளிரச் செய்கிறது.
முடியினுள் கங்கை காந்திருக்கிறது,
நெருப்பை வீசும் கண்கள்
உலகின் காதல் தேவனை எரித்தன,
அவனது கழுத்தும் செவிகளும் பாம்புகளால்
அணிபெற்றுள்ளன,
அவனுக்கு மேலாடை அழகிய களிற்று உரி,
அறிவாய்.
மற்றக் கிரியைகளால் வரும் பயன் ஒன்றும்
இல்லை.

O

மனமே. யானை குதிரைகள் ஆட்சித்தேயம்
இவற்றால் ஆவது என்ன?
மைந்தன் மனைவி மாடு மனை உடம்பு
இவற்றால் ஆவது என்ன?
இவையாவும் நிலைப்பு இல்லாதன
விரைந்து அவற்றை விட்டுத்தள்ளு;
உன் ஆசான் உணர்த்தும் வண்ணம்
தன்னை யறியும் அறிவு பெறற்கு
வணங்குக சிவனை.

௦

நாளும் நாளும் ஒருவன்
சாவை நெருங்கிவருகிறான்
அவனது இளமை கழிந்து செல்கிறது
சென்ற நாள் திரும்புவதோ இல்லை;
எல்லாம் வல்லது காலம், அது
எல்லாவற்றையும் விழுங்கி விடுகிறது.
அதிர்ஷடத் தேவதை, ஓடையின்
சிற்றலை போல்வாள்!
வாழ்க்கையோ மின்னல் போல்வது!
சிவனே, தஞ்சம் தேடி வருவோர்க்குப்
புகல் அளிப்போனே,
காப்பாய் நின்னடி தஞ்சம் புகுந்தேன்.

௧

உமையவள் கணவன், தன்ஒளி உடையோன்
கடவுளர்க்கு ஆசான்
அவனுக்கு வணக்கம்,
மண்பேருலகின் காரண முதல்வன்
அவனுக்கு வணக்கம்,
அரவம் அணிந்தோன் உயிர்க்குலத்தலைவன்
அவனுக்கு வணக்கம்,
கதிரோன் மதியம் நெருப்பு என மிளிரும்
கண் மூன்றுடையோன்,
அவனுக்கு வணக்கம்,
கண்ணனின் அன்பன், தன் அடியார்க்கு
வரங்கள் அளிப்போன்
காப்பிடம் தருவோன்
சங்கரன்—அவனுக்கு வணக்கம்;
நலமிகு சிவனை வணங்குகிறேன்.

O

சிவனே, நீறு பூத்த உன் மேனியோ வெண்மை,
புன்னகை பூக்கும்போது உன் பற்களோ
விளங்கும் வெண்மை,
உன் கையில் உள்ள கபாலம் வெண்மைஎ
தீயோரை மருட்டும் கதையும் வெண்மை,
உன் செவிகளில்தொங்கும் வளையம் வெண்மை,
நீ ஏறி உகைக்கும் காளையும் வெண்மை,
உன் சடைமுடி கங்கையின் நுரையால்
வெண்மையாய்த் தோன்றும்,
எல்லாம் வெண்மையாய் எல்லாம் தூயதா
யிருக்கும் அவன்தான்,

வரம்பிகந்த என் வினைகளுக்காக
மன்னிப்பு என்னும் கருவூலத்தை
வழங்குவானாக.
சிவனே, கைகள் கால்கள் செவிகள் கண்கள்
சொற்கள் யாக்கை உள்ளம் நெஞ்சம்
என்பவற்றால் நான் இழைத்துள்ள
பாவம் யாவும் மன்னிப்பாயே;
சென்றன, இனி வரவிருப்பன ஆகிய
பாவம் யாவும் மன்னிப்பாயே;
அருட்பெருங்கடல், உயரிய கடவுள்,
பேரின்ப நிலையம் ஆன சிவனுக்கு வெற்றி!
சிவனுக்கு வெற்றி! வெற்றி!

o

11

## எளிய சன்னியாசி *

வேதாந்தச் சோலையில் பொழுதெலாம் திரிந்து
கிடைக்கும் பிச்சைக் கவளத்தில் உள்ளம் மகிழ்ந்து
மேலும் அலைந்தவாறு, நெஞ்சம் துக்கத்தின்று
விடுபட்டதாக
இருக்கின்றானே கோவணதாரி, உண்மையில்
அவன் பாக்கியவானே.

○

தங்குதலுக்கு மரத்தின் அடியில் அமர்ந்துகொண்டு
சுருங்கிய உண்டியைக் கையில் வைத்து உண்டு
சொத்துப்பத்தைக் கந்தைத் துணியென்று எறிந்துவிட்டு
இருக்கின்றானே கோவணதாரி, உண்மையில்
அவன் பாக்கியவானே

○

---

* கௌபீன பஞ்சகம்

உள்ளுள் இனிக்கும் பேரின்பத்தே திருப்தியடைந்து
பொறிகளின் ஆசை ஏக்கங்களை முற்றும் களைந்து
பகலிலும் இரவிலும் பிரம்ம இன்பத்தில் களித்து
இருக்கின்றானே கோவணதாரி, உண்மையில்
அவன் பாக்கியவானே.

O

மனம் உடல் அடையும் மாறுதல்களை
வெறும் சாட்சியாய்ப் பார்த்தும்
உள்ளிருக்கும் ஆன்மாவைப் பரமான்மாவில் கண்டும்
புறத்தே அகத்தே இடையே இருப்பன
எதையும் கருதாமல்
இருக்கின்றானே கோவணதாரி, உண்மையில்
அவன் பாக்கியவானே

O

மீட்சி அளிக்கும் உரிச்சொல்லான
பிரம்மம் என்பதை உச்சரித்து ஓதி
'பிரம்மம் நான்' ஆகத் தியானம் மேற்கொண்டு
பிச்சைப் பொருளில் வாழ்க்கையை ஓட்டி
சுதந்திரமாக அலைந்து திரிந்து
இருக்கின்றானே கோவணதாரி, உண்மையில்
அவன் பாக்கியவானே.

O

12

## கும்பிடு கோவிந்தனை *

கதிரவன் உதயம் கதிரவள் மறைவு
பகலின் வெளிச்சம் இரவின் இருட்டு
கார்ப்பருவம் இளவேனில் பருவம்
வருகிறது செல்கிறது
காலத்தின் போக்கும் விளையாட்டாக உளது
வாழ்க்கை தானும் வடிந்து போகின்றது
ஆனால் மனிதனின் வீண் நம்பிக்கை ஆசை
அந்தோ முன்னோக்கி மேன் மேல் செல்கிறது
சலிப்பின்றி முன்னோக்கிச் செல்கிறது
கும்பிடு கோவிந்தனை கும்பிடு கோவிந்தனை
கும்பிடு கோவிந்தனை, மதியிலியே!
சாவின் நேரம் நெருங்கும் பொழுது
இலக்கண விதிகள் 'டுக்ரிங் கரணே' ..
எதற்கும் உதவா.

O

* சர்ப்பட பஞ்சரிக ஸ்தோத்திரம் (பஜ கோவிந்தம்)

சுதகதப்பு வேண்டி, காசில்லாத யாசகன்
தீயின் பக்கம் நெருங்கிக் குனிகிறான்
குளிர்காய்தற்கு வெயிலில் உட்கார்கிறான்
இரவில் உறங்கும் பொழுது கீழே படுத்துக்
குளிர்தாக்காமல் சுருண்டு கொள்கிறான்;
பசியோடு தனது பிச்சை உண்டியைச்
சட்டியிலிருந்து கையில் வைத்து உண்ணுகிறான்
தங்கிடம் அவனுக்கு மரத்தின் நீழல்
இருப்பினும் அவனது நெஞ்சோ
வீண்நம்பிக்கை ஆசையில்
சங்கிலி போட்ட கைதியா யுளது
கும்பிடு கோவிந்தனை கும்பிடு கோவிந்தனை
கும்பிடு கோவிந்தனை, மதியிலியே!
சாவின் நேரம் நெருங்கும் பொழுது
இலக்கண விதிகள் 'டுக்ரிங் கரணே'...
எதற்கும் உதவா.

O

தன் குடும்பத்தை ஒருவன் பேணும் போது
எத்துணை ஆசை அக்கறை காட்டுகிறான்!
ஆனால் அவனது உடம்பு மூப்பால் தள்ளாடி
அந்திம காலம் நெருங்கும் போது
யாரும், மிக நெருங்கிய உறவினர்தாமும்
'எப்படி யிருக்கிறாய்?' என்று கேட்க
அக்கறை காட்டவில்லை
கும்பிடு கோவிந்தனை கும்பிடு கோவிந்தனை
கும்பிடு கோவிந்தனை, மதியிலியே!
சாவின் நேரம் நெருங்கும்போது
இலக்கண விதிகள் 'டுக்ரிங் கரணே'...
எதற்கும் உதவா.

O

சடைசடையான முடியை உடையர்
முழுக்க மழித்த தலையை உடையர்
முடியை முற்றப் பிடுங்கி எடுப்போர்
அவர்களில் சிலபேர் காவிஉடையர்
அவர்களில் சிலபேர் வெவ்வேறு நிறங்களில்
உடையை உடுத்தோர்
எல்லா வேடமும் வயிற்றின் பொருட்டே!
உண்மை தங்கள்முன் வெளிப்படக் கண்டும்
மாயநம்பிக்கையால் அவர்கள்
அதனை இன்னமும் காணார்
கும்பிடு கோவிந்தனை கும்பிடு கோவிந்தனை
கும்பிடு கோவிந்தனை, மதியிலியே!
சாவின் நேரம் நெருங்கும்போது
இலக்கண விதிகள் 'டுக்ரிங் கரணே? ..
எதற்கும் உதவா:

O

கீதையை மட்டும் கொஞ்சம் ஓதி,
கங்கை நீரில் ஒருதுளி பருகி, ஒருவன்
வல்லான் இறைவனை ஒரு முறை தொழுகை
செய்வானாகில்
மரண தேவன் பற்றிய
அச்சம் யாவும் ஒழிந்தே போகும்
கும்பிடு கோவிந்தனை கும்பிடு கோவிந்தனை
கும்பிடு கோவிந்தனை, மதியிலியே!
சாவின் நேரம் நெருங்கும் போது
இலக்கண விதிகள் 'டுக்ரிங் கரணே?...
எதற்கும் உதவா.

O

எய்த்துப் போனது கிழவனின் உடலம்
பல்லில்லாத எயிறு தலேயோ வழுக்கை
வீண் நம்பிக்கை ஆசையை
இறுகக் கட்டியவாறு
கவட்டைக் கோல்களில் அவன் போகின்றான்
கும்பிடு கோவிந்தனை கும்பிடு கோவிந்தனை
கும்பிடு கோவிந்தனை, மதியிலியே!
சாவின் நேரம் நெருங்கும்போது
இலக்கண விதிகள் 'டுக்ரிங் கரணே'...
எதற்கும் உதவா.

O

கவலையறியாப் பாலகன் விளையாட்டில்
தன்னை மறக்கிறான்
காளையோ அன்புக்கு இனியவளின் கவர்ச்சியில்
தன்னை மறக்கிறான்
வயோதிகன் தன் வருத்தங்களில் நினைவு
செலுத்துகிறான்
எவருடைய ஆருயிர், மேலாம் பிரம்மத்தில்
தன்னை மறக்கிறதோ
அத்தகையோரைக் காணமுடியவில்லை
கும்பிடு கோவிந்தனை கும்பிடு கோவிந்தனை
கும்பிடு கோவிந்தனை, மதியிலியே!
சாவின் நேரம் நெருங்கும்போது
இலக்கண விதிகள் 'டுக்ரிங் கரணே'...
எதற்கும் உதவா,

O

மறுபடி பிறப்பு மறுபடி இறப்பு
மறுபடி ஒரு தாய் வயிற்றிற் கிடத்தல்
வாழ்க்கை என்னும் அகல்நெடுங் கடலை
நீந்துதல் கடினம்

இறைவா நின் இரக்கத்தின் மூலம்
என்னை விடுவி
கும்பிடு கோவிந்தனை கும்பிடு கோவிந்தனை
கும்பிடு கோவிந்தனை, மதியிலியே!
சாவின் நேரம் நெருங்கும்போது
இலக்கண விதிகள் 'டுக்ரிங் கரணே'...
எதற்கும் உதவா.

O

மறுபடி இரவு மறுபடி பகல்
மறுபடி நிறைநிலா மறுபடி நிறைபிருள்
மறுபடி மாதம்
கோள் தன் அச்சில் சாய்ந்திருத்தலைக்
கோடையும் காரும் பார்த்துவருகின்றன

மறுபடி அயனம்
ஆண்டுக்குப் பின் ஆண்டு என வருதல்
பிழைத்தல் இல்லை.
'மறுபடி மறுபடி' என்னும் மாறா விதி ஒன்று
உலகை விடாப்பிடி பாகப
பிடித்துளது எனினும்
ஆசை எதிர்பார்ப்பின் நிறைவேற முடியாத உறுதியை
விட்டொழிக்கத் துணிபவர் எவரையும் காணோம்
கும்பிடு கோவிந்தனை குடும்பிடு கோவிந்தனை
கும்பிடு கோவிந்தனை, மதியிலியே!
சாவின் நேரம் நெருங்கும் போது
இலக்கண விதிகள் 'டுக்ரிங் கரணே'...
எதற்கும் உதவா

O

இளமை தப்பி ஓடுகிறது,
சாமத்தால் என்ன ஆதாயம்?
தண்ணீர் ஓடிவிட்டது,
ஏரியால் என்ன பயன்?
பணம் எல்லாம் ஒருசமயம் தீர்ந்துவிட்டது,
நம் நண்பர் உறவினரை எங்கே
காண்பது?
எங்கே உள்ளது உலகம், எப்போது அறிவது
மெய்ப்பொருளை?
கும்பிடு கோவிந்தனை கும்பிடு கோவிந்தனை;
கும்பிடு கோவிந்தனை, மதியிலியே!
சாவின் நேரம் நெருங்கும்போது
இலக்கண விதிகள் 'டுக்ரிங் கரணே'...
எதற்கும் உதவா.

O

பெண்ணின் உடம்பைக் கண்டதும் காமம்
அறியாமையிலிருந்து தாவிவருவது
தவற்றிலிருந்து தாவி வருவது;
திரும்பத் திரும்ப உள்ளத்துள்ளே
அறிவாராய்ந்து பார்!
உடம்புகள் ஆவன தசை இரத்தம் கொழுப்பு;
கும்பிடு கோவிந்தனை கும்பிடு கோவிந்தனை
கும்பிடு கோவிந்தனை, மதியிலியே!
சாவின் நேரம் நெருங்கும்போது
இலக்கண விதிகள் 'டுக்ரிங் கரணே'...
எதற்கும் உதவா.

O

நான் யார்? நீ தான் யார்?
எங்கிருந்து வந்தேன் நான்?
என்று இவ்வாறு நீள நினைத்தால்
அவை யாவும் சாரம் இல்லாத
வெறும் புனைவடிவங்கள்
என்பது புரியும்
வெறுங் கனவு இவ்வையகம் என்று
விட்டு விடுக ;
கும்பிடு கோவிந்தனை கும்பிடு கோவிந்தனை
கும்பிடு கோவிந்தனை, மதியிலியே!
சாவின் நேரம் நெருங்கும்போது,
இலக்கண விதிகள் 'டுக்ரிங் கரணே'...
எதற்கும் உதவா,

O

ஒவ்வொரு நாளும் கீதை ஓதுக
நெஞ்சில் பொதிந்த நேசத்தோடு
நெடியோன் திருப்பெயர் ஆயிரம் நவிலுக
என்றும் திருமாலின் திருமேனியைத் தியானம்புரிக
புனிதாத்மாக்களின் குழாத்தில் இன்புறுக
உன் செல்வ வளங்களை ஏழையர்க்கு ஈக;
கும்பிடு கோவிந்தனை கும்பிடு கோவிந்தனை,
கும்பிடு கோவிந்தனை, மதியிலியே!
சாவின் நேரம் நெருங்கும்போது
இலக்கண விதிகள் 'டுக்ரிங் கரணே'...
எதற்கும் உதவா.

O

மனிதனின் ஆவி உடலில் இருக்கையில்
ஆசையாய் அவன் குடும்பத்தார்
அவன் நலம் கேட்பார்கள்
ஆனால் அவனது உயிர் மூச்சு
தன் குடியிருப்பை விட்டு நீங்கியதும்
அவன்தன் மனைவி கூட அஞ்சி ஓடுவாள்;
கும்பிடு கோவிந்தனை கும்பிடு கோவிந்தனை
கும்பிடு கோவிந்தனை, மதியிலியே!
சாவின் நேரம் நெருங்கும்போது
இலக்கண விதிகள் 'டுக்ரிங் கரணே'...
எதற்கும் உதவா.

O

சுகத்தை விரும்பிக்
காமத்துக்குக் கீழ்ப்படிகின்றவன்
தன் யாக்கையை
நோய்க்கு இரையாய்த் தருகிறான்
மரணம் தான் இறுதி முடிவாயிருப்பினும்
எவனும் தன் பாவக் குணத்தை
விட்டொழிக்க முன்வருகிறானில்லை;
கும்பிடு கோவிந்தனை கும்பிடு கோவிந்தனை
கும்பிடு கோவிந்தனை, மதியிலியே!
சாவின் நேரம் நெருங்கும்போது
இலக்கண விதிகள் 'டுக்ரிங் கரணே'...
எதற்கும் உதவா

O

சாலையில் எறியப்பட்ட கந்தை
சன்னியாசிக்கு ஆடையாய் அமைந்தது.
பாவத்தினின்று விடுபட்டு நன்மையினின்றும் விடுபட்டு
அவன் மேலும் அலைந்து திரிகிறான்
அவனது காட்சியில்
நானும் இல்லை நீயும் இல்லை
உலகமும் இல்லை
எனவே துயருக்கு ஏது இடம்?
கும்பிடு கோவிந்தனை கும்பிடு கோவிந்தனை
கும்பிடு கோவிந்தனை, மதியிலியே!
சாவின் நேரம் நெருங்கும் போது
இலக்கண விதிகள் 'டுக்ரிங் கரணே'...
எதற்கும் உதவா.

O

தன் கடைத்தேற்றம் கருதி ஒருவன்
கடலில் கங்கை கலக்கும் இடத்துக்குப்
புனிதப் பயணம் செய்யலாம்,
விரதம் காக்கலாம் ஏழைகட்கு ஈயலாம்
ஆனால் இவற்றில் எதுவும்—
அவன் மிகஉயர் ஞானம் பெறத் தவறினால்
ஒருநூறு தடவை பிறந்து வாழ்ந்தாலும்—
அவனுக்கு விடுதலையளிக்க
உறுதி தராது;
கும்பிடு கோவிந்தனை கும்பிடு கோவிந்தனை
கும்பிடு கோவிந்தனை, மதியிலியே!
சாவின் நேரம் நெருங்கும்போது
இலக்கண விதிகள் 'டுக்ரிங் கரணே'...
எதற்கும் உதவா

O

## 13

# மயக்கத்திற்கு ஒரு குறுந்தடி *

விட்டுவிடு, மதியிலியே,
பொன்னும்
பெறுமதி மிக்க மணிகளும்
சேர்ப்பதில் உள்ள உன்
தீராத் தாகத்தை விட்டு விடு.
முன்செய் வினைகளின் பயனாய் வருவது கொண்டு
மனநிறைவு அடைவாய்,
நீதியின் பக்கம் உன் மனத்தைச் செலுத்து,
அமைதி உனக்கு விதியாகட்டும்!

O

செல்வச் சொத்துக்கள் துக்கம் கொணரும்;
உண்மையில் அவற்றில் மகிழ்ச்சி இல்லை;
செல்வன் தன் மகனுக்கும் அஞ்சுகிறான்;
இதுதான் எங்கும் இருக்கும் நிலைமை!

O

---

* துவாதச பஞ்சரிகா ஸ்தோத்திரம்

யார் உன் மனைவி? யார் உன் மகவு?
உண்மையிலே விசித்திரம் இவ் அழியும் உலகு;
நீ யார்? உனக்கு யாவர் உறவு?
எங்கிருந்து வந்தாய்? எது அந்தப் பூமி?
சகோதரா, இவற்றை ஆழ்ந்து எண்ணிப் பாராய்!

O

இளமை, நேயம், உடைமைகள்
இவற்றில் பெருமை கொண்டாடாதே;
கண்ணிமைப் பொழுதில் அவை ஒவ்வொன்றும்
காலத்தால் களவாடப்பட்டு விடும்;
உலக மருட்சியை விட்டுத்தொலை;
எக்காலத்தும் உள்ள சத்தியத்தில்
உன்னைச் சேர்த்துக் கொள்வாய்!
காமக் கோபச் சாபக்கேட்டினை விட்டுத்தொலை,
மயக்கத்தை விடு, ஆசையை விட்டொழி,
உண்மையில் யார் நீ என்று எண்ணிப்பார்,
ஆன்மாப் பக்கம் கண்திறவாதோர்
அறிவில்லாதோர்,
அவர்கள் நரகுக்கு வீசப்பட்டு
அங்கே துன்பம் உழப்பர்.

O

கோயிலோ மரமோ உன் இல்லம் ஆகுக,
மான் தோலை உன் உடையாக் கொள்க,
வெறும் தரையைப் படுக்கையாக் கொள்க,
கொடைப் பொருள் புலனின்பம்
என்பன மறுப்பாய்;
இங்ஙனம் சாந்தி அருளப்பெற்றோன்,
திருப்தியாயிருக்கத் தவறுதல் உண்டோ?

O

நண்பனோ எதிரியோ மகனோ உறவோ
அமைதியோ போரோ பற்றுக்கொள்ளாதிரு;
திருமாலின் நிலை அடைதல் வேண்டின்
இவற்றை யெல்லாம் சமமா நோக்குவாய்.

O

திருமால் ஒருவரே
உன்னில் என்னில் எவ்வெவ் விடத்திலும்
உறைபவர்;
உன் சினமும் பொறுமையிலாமையும்
பொருளற்றனவே;
உன்னை நீ ஒவ்வொன்றிலும் கண்டு
எல்லா வேற்றுமையையும் விட்டொழிப்பாயே.
தன்னை அடக்கி உயர்மூச்சைக் கட்டுப்படுத்து,
என்றுமிருப்பதை வைத்துக் கொண்டு
மாறி யழிவனவற்றைத் தூற்றி எறி
இறைவனின் தூய பெயரைத் திரும்பத்
திரும்பக் கூறு,
அலையும் மனத்தை நிலை கொள வை;
உலகளாவிய விதியாம் இதனை
உன் நெஞ்சம், ஆன்மா, கடைப்பிடித்து ஒழுகுக.

O

மானிட வாழ்வு உறுதியில்லாதது,
தாமரை இலைமேல் மழைத்துளி போன்றது;
மானிடம் முழுதுமே
துக்கம் அகந்தை நோய்க்கு இரையாயுளது.

O

பொருள் எல்லாம் உன் மனத்தை அலைக்கழிப்பானேன்?
பகுத்தறிவு உன்னை ஒதுக்கிவிட்டதா?
வாழ்வு மரணம் என்பன பற்றி உனக்கு அறிவுறுத்தி
உன்னை இறுகக் கரம் பற்றி
உணர்த்துவோர் இல்லையா?

O

உன் ஆசானின் தாமரைத் தாளை
உள்ளத்தில் வைத்துப் போற்றிசெய்.
இந்த உலக அடிமைப்பாட்டிலிருந்து
சுணக்கமின்றி உன்னை விடுவித்துக்கொள்,
புலன்களை மனத்தை அடக்கிவை;
உன் நெஞ்சினுள் இறைவன் இருக்கக் காண்!

என் மாணாக்கர் தம் நெறியில் செல்லத்
தூண்டும் பொருட்டு
இப் பன்னிரு கண்ணிகள் வரைந்தேன்;
மெய்ப்பொருளை ஒருவன் தேடாவிட்டால்
அவனது கடும் வேதனை
நரகின் கடும் வேதனைகளையும் மிஞ்சிப்போகும்.

O

14

# நிருவாணம்*

ஓம் நான் மனமோ அல்லன்
புத்தி முனைப்பு சித்தம் அல்லன்
ஓசையோ சுவையோ அல்லன்
நாற்றம் பார்வை புலன்கள் அல்லன்
விண்ணும் அல்லன் காற்றும் அல்லன்
நெருப்போ நீரோ புவியோ அல்லன்
நான் நிரந்தரமான பேரின்பம், உணர்வுநிலை
சிவன் நான் சிவன் நான்.

O

நான் பிராணன் அல்லன்
ஐந்து உள்காற்றும் அல்லன்
யாக்கையின் ஏழு தாதுக்கள் அல்லன்
ஐந்து உறைகளும் அல்லன்
கைகள் அடிகள் நாவும் அல்லன்
தொழில்செய் பொறிகள் அல்லன்
நான் நிரந்தரமான பேரின்பம், உணர்வுநிலை
சிவன் நான் ! சிவன் நான் !

O

---

* நிர்வாண ஷட்கம்

பேராசை இல்லை, ஏமாற்றம் இல்லை,
அருவருப்பு விருப்பு இல்லை எனக்கு
இறுமாப்பு முனைப்பு எதுவும் இல்லை
அறம் பொருள் இன்பம் வீடும் இல்லை,
மனத்தின் வேட்கையோ அதன்
வேட்கைக்கு ஆன பொருளோ இல்லை,
நான் நிரந்தரமான பேரின்பம், உணர்வுநிலை
சிவன் நான்! சிவன் நான்!

O

சுகமோ நோவோ சிறிதும் அறியேன்
அறம் பாவம் அவையும் அறியேன்
மந்திரம் திருத்தலம் வேதம் திருப்பலி
யாதும் அறியேன்
உண்போன் அல்லேன்
உண்ணப்படு பொருளும் அல்லேன்
நான் நிரந்தரமான பேரின்பம், உணர்வுநிலை
சிவன்நான்! சிவன் நான்!

O

மரணமோ அச்சமோ இல்லை எனக்கு
சாதியின் வேறுபாடு இல்லை
தந்தையோ தாயோ இல்லை எனக்கு
பிறப்பும் கூட இல்லை எனக்கு
நண்பன் இல்லை தோழன் இல்லை
சீடன் இல்லை குரு இல்லை
நான் நிரந்தரமான பேரின்பம், உணர்வுநிலை
சிவன் நான்! சிவன் நான்!

O

எனக்கு உருவம் இல்லை திரிவும் இல்லை
எங்கும் உள்ளூடு இருப்போன் நான்
எவ்வெவ்விடத்திலும் வதிவோன் நான்
ஆயினும் புலன்களுக்கு அப்பாற்பட்டோன்
விடுதலை அல்லன் நான்
வேறு, அறியத்தகுவதும் அல்லன் நான்
நான் நிரந்தரமான பேரின்பம், உணர்வுநிலை
சிவன் நான், சிவன் நான்.

O

15

# இறை இன்ப வெள்ளம்

நுண்கலை தொழிற்கலை ஆகிய
எல்லாக் கலைகளும் உடம்பாக உடையோர்,
பிணைந்து கிடக்கும் முடியில்
பிறையை அணியாகக் கொண்டோர்,
தத்தம் தவத்தால் ஒருவரை ஒருவர்
பரிசிலாக அடையப் பெற்றோர்,
வேண்டுவார்க்கு விடுதலையும்
இறையன்பின் பிற பலன்களையும் அளிப்போர்,
மூவுலகுக்கும் மல்கும் நன்மையின்
மூலாதாரமாக இருப்போர்,
தியானத்தில் முன்னேற முன்னேற–
புதுப்பித்துக் கொண்டேயிருக்கும் புதுமை வடிவுகளில்
தங்களைப் புலப்படுத்துவோர்,
தங்களைத் தியானிப்போர் உள்ளத்தில்
மேலாம் பேரின்பம் ஊற்றெடுக்கும்
அனுபவம் அளிப்போர்–ஆகிய
சிவ சக்தியர் முன் வீழ்ந்து வணங்குகிறேன்.

O

அண்ணலே! வையம் அனைத்துக்கும்
மகிழ்ச்சி வழங்குபவனே!
எல்லாப் புகழும் அந்த
ஒப்பிலாப் பேரின்ப வெள்ளத்துக்கே உரியதாக!
அது நின் கதைகளாம் ஆற்றில்
நிறைந்து ஓடுகிறது;
பாவப் புழுதி அடங்கவும்
பிறவி வட்டங்களில் சுழல்வதால் உண்டான
துன்ப வெக்கை நீங்கத் தண்மை தந்தும்
புத்தியாகிய வாய்க்கால்களில் ஓடிவந்து
என் மனமாகிய கண்மாயில் வந்து நிறைகிறது.

O

கண் மூன்றுடையன்
சுடர்ப் பிழம்பாக இருப்பவன்
மறைகளால் அறியப் படுபவன்
தன்னை வழிபடுவாரின் உடல் (புரம்)
மூன்றை அழிப்பவன்
மன்பதைக்கு முதல்வன்
சடைமுடிக் கற்றையுடன் வீறுபெற இருப்பவன்
அசையும் அரவமாலை அணிந்தவன்
மானைக் கைக் கொண்டிருப்பவன்
என்பால் இரக்கம் உள்ளவன்
அனைத்து உயிர்க்கும் இறைவன்
தனி முழு உணர்வின் ஆதரவாக இருப்பவன்
தெய்வ அன்னையினின்று பிரிக்க இயலாதோன்
உலகியல் ஆடையால் உருக் கரந்து இருப்போன்—
ஆகிய அதி தேவனை சிவனை
நான் போற்றி செய்கிறேன்.

O

இந்த உலகினில்
சிறுசிறு நலங்கள் அருள்கின்ற
சிறு தெய்வங்கள் பற்பலர்;
அவர்களை, அவர்களை வழிபடுதலை,
அதனால் கிடைக்கும் ஆதாயங்களை,
நான் கனவிலும் கருதுவதில்லை.
இறைவா! உவகை தருபவனே!
எல்லா நலங்களும் ஓர்உரு ஆனவனே !
நின் தாமரைத் திருவடிகள்,
மாலும் அயனும் நின் அருகில் இருந்தும்
அவர்களால் அடைதற்கு அரியவை;
அவற்றை நான் நெடுகவே
வழிபட்டு வருகிறேன்.

O

ஒழுங்குமுறை நூல்களிலோ தத்துவங்களிலோ
மருத்துவத்திலோ குறிகாணலிலோ
கவிதையிலோ இசையிலோ
பழங்கதைகளிலோ அனுபூதி மந்திரங்களிலோ
புகழ் தொடுத்தலிலோ நடித்தலிலோ
நகைச்சுவை வேடிக்கைகளிலோ
எனக்குத் திறமை இல்லை.
அவ்வாறு இருத்தலின்
அரசர் எங்ஙனம் எனக்கு
உவந்து ஆதரவு தருவர்?
நான் எதற்குத் தகுதியுடையேன்?
அறிவற்றவன் நான்.
அண்ணலே !
நின் கருணையோ நெடும்புகழ் கொண்டது
யாவும் அறிவோன் நீ யாண்டும் விரிந்தோன் நீ
அருள்புரிவாய்.

O

தன்னை அறிவாளியாகக் கருதிக் கொள்ளும்
மானிடனே!
வெருவு தரும் காலதேவனை—
'கடம் அகல்விளக்கு அணுக்கள்
புகை நெருப்பு மலை துணி நூல்' என்று
தருக்கநூற் பொருள்களைச் சொல்லி
விரட்டிவிட முடியுமா?
சூடான சொற்போர்களால்
நின் தொண்டையை வருத்திக் கொள்ளுதல்
வறிது அல்லவா?
அதற்கு மாறாக
இறைவனை வழுத்துவாய்
மேலாம் இன்பத்தைக் கடிதே அடைவாய்.

O

இறைவா!
உலகனைத்துக்கும் நலம் மிகச் செய்பவனே!
என் மனம் நின் தாமரைத் தாளில்
நிலைப்பதாக
என் சொல் நின் புகழில் இருப்பதாக
என் கை நின்னைத் தொழுதலில் இருப்பதாக
என் செவி நின் திருக்கதையில் இருப்பதாக
என் புத்தி நின்னைத் தியானம் செய்து இருப்பதாக
என் கண் நின் புகழ்வடிவில் இருப்பதாக
அவ்வாறாயின்
நின்னொடு தொடர்பில்லாத நூல்களை
எவ் வுறுப்பால் வாசிப்பேன் நான்?

O

பெருந்தேவா! உயிர்களின் தலைவா!
நின்னை மனத்தில் எண்ணாமல்
இப்பியை வெள்ளியென்றும்
வெறும் கல்லை வைரமென்றும்
மாவுத் தண்ணீரை ஆவின் பால் என்றும்
கானலை நீர் என்றும்
காணும் மயக்கம் போல்
அறியா மாந்தர்
பல்வேறு பொருளைத் தெய்வமாக் கருதி
வழிபடுகின்றனர்!

O

மந்த மதியினன்
மலர்களைத் தேடி
ஆழமான தாமரைக் குளங்களுக்கும்
ஆளில்லாத அடர்ந்த காடுகளுக்கும்
உயரமான மலைகளுக்கும் போய் அலைகின்றான்.
உமாபதியே! அந்தோ, அவன்
தன் நெஞ்சமாம் தனித் தாமரையை
உனக்குக் கொடுத்துத்
தன் வாழ்வில் மகிழ்ந்திருக்க அறியவில்லையே!

O

மானிடனாகவோ தேவனாகவோ
வனவிலங்காகவோ கொசுகு ஆகவோ
மற்றுள புழு புள் அல்லது
வேறு உயிராகவோ நான் பிறக்கலாம்.
அந்த அப் பிறவிகளில்,
நின் அடித் தாமரையை எப்போதும்
நினைந்திருத்தலில் அடங்கிய

மேலாம் பேரின்ப அலைகளில் திளைத்திருக்க
என் நெஞ்சம் நிரந்தரம் விரும்புமாயின்
அந்த அப் பிறவிகளால்
என்ன கெடுதி வந்து விடும்?

O

மாணாக்கனாக இல்வாழ்வானாக
துறவியாக காடுறைவானாக
இந் நான்கிலும் வேறானவனாக
இருந்து என்ன ஆகப் போகிறது?
இறைவா! உயிர் அனைத்தின் தலைவா!
நலம் எல்லாம் நல்குவோனே!
எவனது நெஞ்சத் தாமரை
உன்னிடம் இருக்கிறதோ
நீ அவனுடையவன் ஆகிறாய்
நீ அவனது உலகியல் சுமைகளைத்
தாங்கிக் கொள்கிறாய்.

O

ஒருவன் வாழும் இடம் எதுவாயிருந்தால் என்ன?
குகையோ வீடோ வெட்ட வெளியோ
காடோ மலையோ நீரிடை நெருப்பிடையோ
எங்கிருந்தால் என்ன?
இறைவா! ஒருவனின் மனம்
நின் அடிக்கண் உறையுமானால்
அவனது நிலை யோக நிலை;
அவன் மிக உயர்ந்த யோகி, இன்பவாணன்.

O

உயிர்களுள் மிகமிக மேலானவனே !
அறியாமையால் உணவு மழுங்கி
நின் வழிபாட்டினின்றும் மிக விலகி
உள்ளீடற்ற உலகியலில் புரண்டு கிடக்கும்
என்னைக் காப்பது நினக்குத் தக்கதேயாகும்.
அனைத்துயிர்க்கும் தலைவா !
என்னைக் காட்டிலும் இன்னல் படுவார் யாருளர்?
இன்னல் படுவாரைக் காப்பதில் வல்லோர்
நின்னைக் காட்டிலும் யாருளர்?
இம் மூவுலகிலும், ஒருவன்
அடைக்கலம் புகற்கு நின்னை யன்றி
வேறு இடம் எங்கு உளது?

O

மன்னுயிர்த் தலைவா! எல்லாம் வல்லனாகவும்
அதே சமயம்
யான் முதல்வனாக என்னைப் போல்
படுதுயர் உழப்பார் தமக்கு
மிக உயர்ந்த நேசனாகவும்
இருப்போன் அல்லனோ நீ!
அதனால் நம்மிடை ஒரு
நெருக்கமான உறவு இருக்கிறது அன்றோ!
ஆகவே, நலம் செய்வோனே!
வரம்பு இகந்த என் செயல்களைப்
பொறுத்தல் செய்வாயாக;
அங்ஙனம் செய்தல் கடினம் ஆயினும்
நீ செய்யவே வேண்டும்.
நெருக்கமான நேயத்துக்கு
எப்போதும் இது தானே தேர்வு?

O

உன்னை யாண்டும் நினைந்திருக்க முடியாமல்
தீய இயல்புகளுக்குத் திசை திருப்புவதாக
ஆதரவற்றதாக
இருப்பது என் தலை எழுத்து;
அதனை மாற்றிவிட நின்னால் முடியும்
நீயோ அசட்டையாக இருந்து விட்டாய்;
உன்னால் ஆகாது எனச் சொல்ல முடியாதே!
உரமாகவும் கடினமாகவும் இருக்கும்
அயனின் தலையை
அலட்டிக் கொள்ளாமல்
விரல் நகத்தால் கிள்ளி எறிந்தவன்
அல்லனோ நீ!

O

இறைவா ! படைப்பாளியான பிரமன்
நெடிது வாழ்ந்து வருவானாக !
அவனது மற்றத் தலைகளை நீ
ஒன்றும் செய்து விடாதே;
உயிர்களுக்கு இடும்பைத் துன்பம்
கொடுத்தோன் அவன், அல்லவா?
அவனுக்கு நீண்ட ஆயுள் விழைவது ஏன்
என்று வினவிலாம்;
தூயனே!
உண்மையில், அவனால் தான்,
இடும்பைப் படுவாரைக் கரையேற்றும் விருப்பு
இயல்பாகக் கொண்ட நின் அருட்கண் வீச்சால்
நான் காப்பாற்றப்படும் வாய்ப்புக் கிடைத்தது!

O

யாண்டும் உள்ள இறைவனே!
என் சிறப்பான செய்கைகளாலும்
நின் அருட்கனிவாலும்
என்னிடம் இனிமை உடையவன் நீ
ஆயினும் நின் திருவடித் தாமரையை
யான் காண ஒண்ணாதது ஏன்?
கிளர் மனத்தோடு தேவர்களின் குழாம்
வீழ்ந்து பணிய
விலைமிக்க மணிகள் பதித்த பொன்முடிகள்
மறைத்துக் கொள்ளுதலால்
யான் காண ஒண்ணாதிருக்கின்றது!

O

பரிசில் யாவற்றிலும் பெரும் பரிசிலான
விடுதலையை, அண்ணலே!
நீ ஒருவனே மானிடர்க்கு வழங்க வல்லவன்;
மால் முதலாம் மற்றைய தேவர்களும்
நீ தந்த தேவ நிலையில் அமர்ந்திருந்து
நின்னை வழிபட்டு வருகின்றனர்;
இறையன்பு உடையாரிடம் நின்
தாராளத் தன்மைக்கு வரம்பு கிடையாது;
உலகியல் ஆசைகளும் வரம்பின்றி இருக்கின்றன;
ஆகவே என்னைக் காக்க
நின் அருளிரக்கப் பார்வையை
எப்பொழுது நீ செலுத்தவிருக்கிறாய்?

O

உலகியல் வாழ்வு தீய வேட்கைகள் நிரம்பியது;
இழிந்த அதிகாரிகட்கு அடிமைப்பட்டிருத்தல்
அதற்கு இன்றியமையாதாகின்றது;
கடைசியில் அவப்பேறாக முடிவது அது;
பாவத்தின் ஊற்றகமாக இருக்கிறது.
வேதனையான அனுபவங்கள்
விளைப்பதாக உள்ளது அது.
இந்த என் அவல நோய்க்கு
நீ மருந்து அளியாமல் இருப்பது
யாருடைய நன்மைக்காக?
இறைவா! நீ அவ்வாறு இருப்பது
நினக்கு மகிழ்வு தருமானால்,
நன்று, நாங்கள் திருப்தி அடைகிறோம்.

○

பெருமானே! கையில் தலை ஓடு தாங்கியுள்ளாய் நீ
இரந்து திரிகின்றாய்!
நலந்தருவோனே! எங்கும் மருவியுளோன் நீ!
என் மனமாகிய பணத்தை
மனப்பூர்வமான காணிக்கையாகத் தருகிறேன்
எடுத்துக் கொள்.
அதனை ஈடுபாட்டால் கட்டிப்போடு
நின் கட்டுப்பாட்டில் வைத்துக் கொள்
மிகச் சிறுபிள்ளைத்தனமாக உள்ள அந்தக் குரங்கு
அறியாமைக் காட்டில்
இளமாதரார் மார்பாம் மலைமுகடுகளில் ஆடியும்
வெவ்வேறு திக்குகளில்
உலகாசைக் கிளைகளில் விரைந்து குதித்தும்
காலமெலாம் அலைந்து திரிகிறது.

○

காமனை வென்றவனே! உலகை ஆள்வோனே!
மங்கலமானவனே!
யாண்டும் உள்விரவி இருப்போனே!
அடியார் சூழப்பெற்றவனே!
விருப்பவுறுதியே தாங்கு தூணாக
குணங்களே வலுவான கயிறுகளாக
மிகப் பலவாம் மனநிலைகள் பல்வகை
வண்ணங்களாக
உளவியல் மையங்களே தாமரை ஓவியங்களாக
தெய்விகச் சிந்தனையாம் நேர்வழியில்
நாளும் நிறுத்தப்பட்டிருப்பதான—
ஒளிர்ந்து அசையும் என் மனக் கூடாரத்தில்
நின் இறையருட் சக்தியாம் துணைவியோடு
நீ எழுந்தருள்வாயாக!

O

நன்மை நல்குவோனே !
எங்கும் மருவியிருக்கும் ஒருவனே !
என் மனமாகிய கள்ளன்
பேராசையாலும் பிற தீக் குணங்களாலும்
தூண்டப்பட்டு
மோசம் செய்து பணம் சேர்க்கும்
எண்ணத்திற்கு அடிமையாகி,
சொத்துச் சுகமுடையாரின் வீடுகளில் புகக்
கருத்தூன்றி,
எங்கும் அலைந்து திரிந்து கொண்டிருக்கிறான்.
கள்ளர் கோமானே, அவ்வாறு அவனிருக்க
நான் துன்புறுவது எதனால்?
நான் குற்றம் எதுவும் அறிந்திலேன்.
என் மேல் கருணை காட்டு;
அவனை நின் கட்டுப்பாட்டில் கொண்டுவா.

O

எல்லாவற்றிலும் பரந்திருப்போனே!
நின் வழிபாட்டில் இழைந்திருப்போனாகிய எனக்கு
நிலைப் பேரின்பம் தந்தருள்வாயாக.
நின்னை வழிபடலால்
எனக்கு மால் அயன் நிலையைத் தந்துள்ளாய்.
அவர்கள் இருவரும் முறையே
பறவை விலங்காக விண்ணிலும் மண்ணிலும்
தேடி அலைகிறார்கள்;
என்னால் எங்ஙனம் துன்பம் தாங்க முடியும்?

O

தெய்வக் கயிலையில் அமைந்திருக்கும்
பொன்மணி மாளிகையில்
சிவன் தன் கணங்களொடு அமர்ந்திருக்க,
அந்தத் திருமுன்னர்,
தலைமேல் கைகுவித்து,
''இறைவா! மேலாம் நலத்தனே?
யாண்டும் டரவியுள்ளோனே!
தெய்வத் தாயொடு ஒன்றுபட்டிருப்பானே!
அனைத்துலகங்கட்கும் கோமானே!
என்னைக் காப்பாய்'' என்று
பேரானந்த நிலையில்
பற்பல பிரமர்களின் ஆயுளாம் மிக நீண்ட காலத்தை
நொடிப் பொழுதாக நான் கழிப்பது எப்போது?

O

விழிமூன்றுடையோய்! நீல மிடற்றோய்!
பெரியதும் ஊக்க மிக்கதுமான காளைமேல் அமர்ந்து
போர் மழுவையும் மானையும்
நீ நின்னிரு கரத்து ஏந்தியிருக்க,
உமையவள் நின் மேனி தழுவிப் பிடிக்க,
தெய்விக அணுக்கர்கள் இசை கூட்டியிருக்க
அயன் போல்வார் நின் புகழ் போற்றிப் பாடிநிற்க
நோன்பிகள் வெற்றி வெற்றி எனக் கூவி
வாழ்த்தி யிருக்க
நின்னை நான் காண்பது எப்போது?

●

மலையினில் உறைவோய்!
நின்னைக் கண்டு நின் தூய தாளிணை பற்றி
அவற்றை என் தலை மார்பு கண்களிற் பதித்து
அணைத்து
அன்றலர் தாமரை அனைய அவற்றின் மணம் மோந்து
அயன் முதலியோர் அடைதற்கு அரிய
பேரின்ப நிலை அடைவது எப்போது?

○

பொன்மலையை நீ வில்லாகப் பிடித்திருக்கிறாய்,
செல்வத் தலைவன் குபேரன்
நின் அருகே இருக்கிறான்,
விழைந்ததை வழங்கும் கற்பகமரமும்
தெய்விக ஆவாம் நிறை காமதேனுவும்
விரும்பிய அளிக்கும் மந்திரமணியாம்
சிந்தாமணியும்
நின் இருப்பிடத்து இருக்கின்றன;

ஒரே ஓர் வேண்டுதல் எனக்கு நீ
நிறைவேற்றித் தரக் குறையிரக்கிறேன்;
உலகப் பேராசானே,
தேவர்கள் ஆர்வத்தொடு எதிர்நோக்கி நிற்கும் நின்
அருள் விழி நோக்கினை என்பால் திருப்புவாயாக
நிலை பேரின்பம் அளிக்கும்
அறிவுரையை எனக்கு வழங்குவாயாக!

○

பின்னலிட்டுக் கிடக்கும் முடியினில்
பிறையை அணியாகச் சூடியவனே!
உயிர்களின் தலைவா! எல்லாவற்றுக்கும் இறைவா!
உலகுகளின் உயர் குரவா!
நினக்கு ஆடை புனைய
எனக்குக் கதிரோன் போல் ஆயிரம் கை இருக்குமானால்
நினக்கு மணம் வீச
மென் காற்றுப் போல் அலையும் திறம் இருக்குமானால்
நினக்குப் படையற் பொருள் சமைக்க
நெருப்பின் தலைவன் இந்திரன் போல்
அதிகாரம் இருக்குமானால்
வேண்டிய கலங்கள் கொண்டு
நினைப் பூசிக்க
இரணிய கருப்பம் போல் பொன் முட்டையில்
எனக்கு வழிமரபு இருக்குமானால்
நின் பணிவிடையை
நான் சிறப்புறச் செய்திருப்பேனே!

○

திங்கள் நின் தலைமாட்டு இருக்கிறது,
மங்கலம் எல்லாம் நின் காலடியில்
இருக்கின்றன; ஆகலின்
விலைமதியுள்ள எந்தப் பொருளை
நான் நினக்குக் காணிக்கை ஆக்குவேன்?
மலை உறைவோனே! என் மனம்—
அது நின்னதாகுக!

O

பவானி கேள்வனே!
நினக்குப் பூசனை புரிதலால்
நின் போல் வடிவை அடைகிறேன்;
நின் புகழை இசைதலால்
நினது அணுக்கம் அடைகிறேன்;
நின் மாணடியாரொடு இணங்கி உரையாடலால்
நின் வானக இருப்பு எய்துகிறேன்;
உயிர் உள்ளவும் இல்லவுமான
இம் மன்பேருலகால் உருவான நின் வடிவைத்
தியானம் செய்தலால்
அவ்வடிவில் ஒன்றிவிடும் நிலை எய்தினேன்;
இவ்வாறு இவ் யாக்கையிலே
வாழ்வின் நிறைவேற்றத்தை
நான் அடைந்துவிடுகிறேன்.

O

யாவற்றிலும் இலகும் இறைவா!
நின் தாமரைத் தாள் தொழுகிறேன்.
மேலோனே! நின்னை எக்காலும் நினைக்கிறேன்.
உலகுகளின் பெருமானே!
நின்முன் என்னை ஒப்படை செய்கிறேன்,
இன்மகிழ்வு அளிப்போனே

அனைத்து ஆன்மாக்களின் முதல்வனே!
உனக்கு உள்ளும் புறத்தும் இருக்கின்ற
உயிருள்ளன இல்லனவாகிய அனைத்தையும்
காத்தற்காக,
அமரர் அனைவரையும் அஞ்சி ஓடச் செய்த
அச்சம் தரும் அனல் நஞ்சினை
நீ விழுங்கவோ கக்கவோ செய்யாது
மிடற்றில் இருத்திக் கொண்டாய்
இந்த ஒப்புரவுப் பெருஞ்செயல்
ஒன்று போதாதா நின் பெருமையை விளம்புதற்கு?

O

பேரான்மாவே!
எல்லா நலங்கட்கும் மூலாதாரமே!
அழிவிலராய தேவர்கள்தாமும் அஞ்சி ஓடவும்
அந்த நஞ்சிடம் நீ பார்வை செலுத்தியது எவ்வாறு?
நெருப்பெனக் கனலும் அந்த நஞ்சினைக்
கையில் எடுத்தாய் வைத்துக் கொண்டாய்
அஃது எவ்வாறு?
நின் கையகத்து இருக்க
அஃது என்ன முதிர் நாவற்கனியா?
அதற்கு மேலும்
அதனை வாயினில் இட்டுக் கொண்டாய்
அஃது என்ன சித்தர் செய்த மாத்திரையா?
நின் மிடற்றிலே ஒரு நீலமணியாக
ஏந்திக் கொண்டாயே
அதுதானும் எவ்வாறோ?

O

பெருமானே! யாவும் வல்லானே!
விடுதலையின் பொருட்டு என் போன்றோர்
நின்னை ஒருமுறை
வீழ்ந்து பணிதலோ போற்றுதலோ
தெய்விகக் கதைகளைக் கேட்டலோ
அகக்காட்சியிற் காணலோ
நினைவில் இருத்தலோ
செய்தல் போதாதா?
இல்லையேல் வேறெதனால் தான்
விடுதலை அடைதல் கூடும்?
இவற்றுள் யாதேனும் ஒன்றால் அடையலாமெனில்
நிலையில்லாத் தெய்வங்களைக்
கடுமையாக வழிபடுதலால்
என்ன ஆதாயம் வந்துவிடப் போகிறது?

O

மன்பதைத் தலைவா!
நின் நடத்தை எவ்வளவு சாகசம் ஆனது!
துணிச்சலில் நினக்கு நிகர் இருக்க முடியுமா?
அந்த நின் நிலையை யாரே அடைவர்?
வானவர் தத்தம் வானக நிலைகளை இழக்கவும்
முனிவரர் பேரச்சம் கொள்ளவும்
உலக அமைப்புகள் உடைந்து
தத்தம் தொடக்க நிலைகட்கு வந்துவிடவும்
உள்ள, ஊழிக்கால அழிவினைக்
கண்முன் கண்டும் நீ அஞ்சாமல்
தனிமையில் நிறைபேரின்பத்தில்
கூத்திடுகின்றாய்!

O

நிகழ் காலத்தும் வருங்காலத்தும்
உயிர்களுக்கு ஆகும் நலங்களைச் செய்யும் பொறுப்பை
மேற்கொண்டிருக்கும் உன்னிடம்
நான் என்ன வேண்டுதல் செய்ய இருக்கிறது?
நலமெலாம் நல்க
நீ ஆயத்தமாயிருக்கிறாய்
இப்போது உள்ள சமயங்கள்
இனி இருக்கலாகும் சமயங்கள்
யாவற்றிலும் விளங்கி நிற்பவன் நீ,
அனைத்தும் அறிந்தோன், இரக்கமே உரு ஆனவன்,
எனக்கு மிகப் பிடித்தமானவன் நெருக்கமானவன்
என்று எப்போதும் நின்னையே
நான் நினைத்திருக்கிறேன்.

O

இறையன்னையோடு இயைந்திருப்போனே!
என் உடம்பாகிய வீட்டை
வாலிது ஆக்க, மங்கலமாக்க
நின் அடியவனாகிய நான்,
ஐந்தெழுத்து மந்திரம் சொல்லி
உவகையாம் நீர் நிரம்பிய,
அமைதி சான்ற என் மனமாம் (பூரண) கும்பத்தில்
இறையன்பு நூலைச் சுற்றிக் கட்டி
அதன் மேல் மெல்லிய மா இலைகளாக
நின் திருப் பாதங்களை வைத்து
அதன் மேல் அறிவாகிய தேங்காயை வைத்துத்
தூய்மை வினை (புண்யாகம்) செய்கிறேன்.

O

வானவர் பாற்கடல் கடைந்தனர்;
திங்களை (சோமனை), விழைந்தது கொடுக்கும் மரத்தை,
நிறைந்து பொழியும் ஆவை, விந்தைக் கல்லை,
அமுதை, கொழி அழகை (திருமகளை)
அடைந்தனர்;
அறிஞர் தம் நன்மனம் மத்தாக,
உறுதியான பேரன்பு கயிறாக,
திருமறைகளாகிய கடல் கடைந்து
சோமனாகிய உன்னை,
விழைவெலாம் நிறைவேற்றும் மரம் போன்று
நிறைந்து பொழியும் ஆப் போன்று
நினைத்தது எல்லாம் தரும் விந்தைக்கல் போன்று
அமுதம் போன்று
இடையறாப் பேரின்பம் அளிப்பவனை
திருமகள் போல் விடுதலை தருபவனை
அடைகின்றனர்!

O
விண்மீன்கள் சூழ,
தூய, மங்கலமான, மான் உடன் கூடிய,
இருளை அழிக்கும் நிறைமதி (சோமன்)
கிழக்கு மலைமேல் வானில்
காட்சி தரும் போது கடல் பொங்குகிறது;
அவ்வாறே நீ, சோமன் (உமையோடு இருப்பவன்)
தூயன், மங்கலமானவன், நிறைவுடையன்,
மானேந்தி, அறியாமை அழிப்பவன்
என் நெஞ்சில் உதிக்கும் பொழுது,
முந்திய காலங்களில் ஈட்டிய
அறங்களாம் மலைமேல் நின் அமுத வடிவம்
காட்சி தருகின்றது.
மகிழ்ச்சி அளவு கடந்து பொங்குகிறது அப்பொழுது.

நல்லரசன் ஆட்சி புரியும் தேசத்தில்
நேர்மை ஓங்கும், தீங்கு ஒழியும்,
பொதுவான செல்வச் செழிப்பு
அறிவு மகிழ்ச்சிப்பெருக்கு நிலவிவரும்;
அங்ஙனமே
வணக்கத்திற்குரிய பேரரசனாகிய நீ
விடுதலையாம் தேசத்தின் வேந்தனாகிய நீ
என் நெஞ்சத் தாமரையில் ஆட்சிபுரியுங்கால்
நேர்மைச் செய்கைகள் முழுமை பெறுகின்றன
பாவங்கள் அழிகின்றன
கடுமையான தீ உணர்ச்சிகள் மடிகின்றன
என் வாழ்வு இனிதாகின்றது
அறிவும் பேரின்பமும் பலன்கொள்கின்றன.

O

இறைவா ! எல்லாவற்றுக்கும் மேலவா !
அறிவு இயந்திரத்தால்
சொற்களாம் நீர் இறை கலம் கொண்டு
சதாசிவத்தின்
இறைமைக் கதைகளாம் தூய தண்ணீரைக்
கவிதையாம் பெரிய சிறிய வாய்க்கால் வழியே
நெஞ்சயாம் நன்செய்யில் பாய்ச்சும் பொழுது
இறைமை யன்பாம் நெற்பயிரில்
நிறைவான வேளாண்மை கிடைக்கிறது;
ஆகவே நிற்சார்ந்துள்ள எனக்கு,
பஞ்சம் வரும் என்ற அச்சத்திற்கு
இடம் ஏது?

O

சாவைச் சாவிப்பவனே!
பாவம் அழிய, பெருவளன் (விடுதலை) எய்த
நின் புகழ் பாடச் சொல்கிறது நா
நின்னை நினைந்திருக்கச் சொல்கிறது மனம்
நின்னைப் பணிந்தெழச் சொல்கிறது தலை
நின்னை வலம்வரச் சொல்கின்றன கால்
நின்னைக் காணச் சொல்கின்றன கண்
நின் கதை உண்ணச் சொல்கின்றன செவி
இந்தச் செய்கைகளின் பக்கம்
என்னைத் திருப்பிவிடு; நினைவு படுத்து;
நான் அவ்வாறு செய்யாவாறு
முடங்கிவிடக் கூடாது.

O

கோட்டை (துர்க்க) இருப்பில் நீ
விருப்புடன் இருக்கிறாய், இறைவா!
கல்வியே நிறை செல்வமாக,
வலிய பொறிபுலன்களே வாயில்களாக,
ஊக்கமுள்ள பன்மடங்கு நல்வினைகள்
பணிவுறுதி கொண்ட படைகளாக,
விடாப்பிடியான தீர்மானம் சுற்றுமதிலாக
அமைதி அகழியாக,
போதிய ஏற்பாட்டுடன் இருக்கும் என்மனமாம்
கோட்டையில் வந்து தங்கியிருப்பாயாக!

O

மலையில் உறையும் இறைவா! ஆதி வேடனே!
அங்கும் இங்கும் நீ அலையவேண்டா;
என்னகத்தே இரு.
ஏனெனில் என் உள்ளமாம் வனத்தே
வேட்டைக்கான விலங்குகள் பற்பல;
வெறி அழுக்காறு அவா மயக்கம்
மற்றுமுள இருக்கின்றன.
அவற்றைக் கொன்று நின்
வேட்டை விருப்பில் திருப்தி கொள்வாயாக.

O

அரிமா தன் இரையைப் பிடித்திருத்தல்போல்
நீ மானைக் கையில் வைத்திருக்கிறாய்;
யானை புலிகளின் பெரிய தலைமாக்களை
அரிமா கொல்வது போல்
பேருருவினராகிய யானை புலி வடிவத்து
அரக்கர்களை அழித்தாய் நீ;
வனத்து விலங்குகளை எல்லாம் அரிமா அழித்தல்போல்
ஊழி முடிவில் உயிர்கள் அனைத்தையும்
நீ அழித்து விடுகின்றாய்;
இவ்வாறு இறைவன் சிவன்
செம்மேனியன் ஐம் முகத்தோன்,
ஐம்முகம் எனப்படும் அரிமாவுக்கு ஒப்பாக இருப்போன்
என் நெஞ்சக்குகையில் குடியிருக்கிறான்;
ஆகலின் யான் அஞ்சக் காரணம்
எங்கிருந்து வரக்கூடும்?

O

உள்ளமாம் அரசப் பறவையே !
வீணே சுற்றி அலைவதையும்
வேறு பொருள்களைத் தேடித்திரிவதையும்
விட்டு விடு;
சிவன் கழலாகிய கூட்டில் ஆடிமகிழ்வாயாக!
வேதங்களாம் மரக்கிளைகளிடையே
சிறகடித்து மகிழும்
புனிதர்களாகிய பறவைகள் எக்காலத்தும்
அங்கே விளையாடிக் கொண்டிருக்கின்றன;
அந்த இடம்
விடுதலையின் கனிகளான
அழிவின்மை மகிழ்ச்சி தரல் துன்பநீக்கம்
அமுதமயம் என்பனவற்றால்
இனிமைபூத்திருக்கிறது.

O

என் மனமாம் அரச அன்னமே!
சிவனடியாகிய அந்தரங்க மாளிகையில் தங்கி
பக்தியாம் மாதரொடு மகிழ்ந்து ஆடுவாயாக;
நக்ஙகளினின்று பரவும்
செழிப்பான ஒளியால் அது பிரகாசமாக உள்ளது,
பிறைத் திங்களின் அமுதக் கதிர்களால்
வெள்ளைதீற்றப் பெற்றிருக்கிறது அது,
தாமரைத் தாளாம் பதுமராக மணியால்
அது பளபளப்புக் கவர்ச்சி கொண்டிருக்கிறது,
அன்ன மந்திரத்தின் பொருளை நினைந்திருக்கும்
அறவோராகிய அன்னப் பறவைகள்
தங்கிச் செல்லுமிடமாக இருப்பது அந்த மாளிகை.

O

இறைத் தியானம் என்கின்ற இளவேனிற் காலம்
என் இதயத் தோட்டத்தில் வந்து சேர்ந்து விட்டது;
பாவப் பழுப்புகள் உதிர்ந்துவிட்டன,
இறையன்பாம் கொடிகளில்
நற்செய்கைகளாம் துளிர்கள் கொழிக்கின்றன
அறமாகிய அரும்பு கட்டித்
தூய திருமொழிகளாகிய மலர்கள்
செம்மனச் செவ்விகளாம் நன்மணம் கொள்ளத்
தொடங்கிவிட்டன
அறிவு கொணர்வதாம்
பேரின்பத் தேனின் பெருக்கும்
மெய்யுணர்வுக் கனி விளைவும்
ஊற்றம் கொள்ளத் தொடங்கியிருக்கின்றன.

O

என் மனமாம் அரச அன்னமே!
புல்லுயிர்களுக்குப் பொருத்தமாகவுள்ள
உலகியலாம் சேற்றுக் குளங்களில்
ஏன் நீ அலைந்து திரிகிறாய்!
இறைத் தியானம் என்னும்
மன்னிய தூய ஏரிக்கு நீ செல்லுவாயாக
என்றுமுள பேரின்பமே அதில் தண்ணீராக
கடவுள் முனிவர்களின் மனங்களே
தாமரை மலர்களாக
புனிதாத்மாக்களே அங்கு வந்துறையும் புட்களாக
பாவங்களே அங்குப் போக்கப்படும் அழுக்காக
நற்பண்புச் செவ்விகளே
அங்குக் கமழ்கின்ற மணமாக இருக்கின்றன.

O

இறையன்பாம் படர்கொடி
உவகை நீர் நிரம்ப,
சிவனின் தாமரைத் தாளாம் பாத்தியில்
தழைந்து வளர்கிறது;
நிலைத்த நாட்டமென்னும் கொழுகொம்பில்
அது பக்கக் கிளைகள் சிம்புகள் பரப்புகின்றது;
உள்ளத்தின் உயரிய மேற் கூரையைப் போர்த்துகிறது;
நற்செய்கை என்ற பணி
அதனை வளர்த்துப் பேணுகிறது
பாவம் என்ற நோய் அதனை அண்டுவதில்லை;
விரும்பற்குரியதும் நிலையானதும் ஆகிய
(விடுதலை என்ற) கனி விளைபயனென
அந்த இறையன்புக் கொடி
எனக்குக் கொடுக்குமாக.

O

மல்லிகைக் கொடி சுற்றிய
மருதுமரம் போன்றிருக்கிறான் அண்ணல் சிவன்,
அந்தி நேரத்தில் அந்தமரத்தின்
அரும்புகள் விரிகின்றன:
அவன் அந்நேரத்தில் நடனமிடுகிறான்;
மானிடரின் முடியில் இடம்பெறும் மருதமலர்,
வேத ஞானமாகிய முடியில்
இடம் கொண்டிருக்கிறான் இறைவன்;
இனிய தன் துணையின் உடனிருப்பால்
அழகுறத் திகழ்கிறான் அவன்;

மரமும் ஆர்வமுள்ள தேனீக்களால்
அழகு பெற்றிலங்குகின்றது

தனி நன்மணம் அந்த மரத்தை
இனம் காட்டுகிறது;
அவ்வாறே
இறைவனை அணுகும் நன்மக்கள்
பகுத்தறிவால் அவனைக் கண்டுகொள்கின்றனர்,
அரவரசுகளை அணிகலனாகப்
பூண்டுள்ளான் சிவன்;
இன்பம் விழைவாரின் அலங்காரத்துக்கான
மலர்களைக் கொண்டுள்ளது மருதமரம்;
மற்ற எல்லாக் கடவுளராலும்
வழிபடற்குரிய ஏந்தலா யிருப்பவன் சிவன்;
மற்ற மலர்களுள்
ஏற்றமிக்கிருப்பது மருதமலர்;
முக்குணமாம் இயற்கைத் தன்மையைத்
காட்டுகிருன் இறைவன்;
மணம் நிறம் முதலாம் தன்மைகளை
மருத மலர்கள் காட்டிநிற்கின்றன;
திருப்பருப்பத (திருச்சைலம்) மலையில்
மல்லிகை மருதனாக (மல்லிகார்ச்சுனனாக)
இலிங்க வடிவில் இருக்கிறான் அவன்;
மருத மரமோ அழகிய சிகரமொன்றில்
நிலை கொண்டுள்ளது
மலைமகளால் தழுவப் பெற்றுள்ளான் அவன்,
மல்லிகைக் கொடி தழுவப்பெற்றுள்ளது மருதமரம்;
மரத்தின் உவமையாக இருப்பவன்.
திருச்சைலத்தில் மல்லிகார்ச்சனம் என்ற
அடையாளத்தில் அமைந்திருப்பவன்-
ஆகிய சிவனை
நான் துதிக்கிறேன்.

O

பெருமான் சிவன்
தேனீ அரசன் போல்கிறான்;
அரசியின் விருப்புக்கு ஏற்பச் செயலாற்றுவதில்
தேனீ அரசு இன்பம் காட்டுகிறது,
சிவன் தன் அணுக்கனான
பிருங்கி தானாக விரும்பி ஆடுவதைக் காண
விருப்புகிறான்;
யானையின் மதநீரைத் தேனீ அகற்றுகிறது
யானை யரக்கனின் செருக்கை அழிக்கிறான் அவன்;
கிளரும் இளவேனிற் பெரும் பொழுதில்
தேனீ இன்பம் பெறுகிறது
கவர்ச்சி மாதாகிய மோகினிவடிவத்
திருமாலை விழைகிருன் அவன்;
தேனீ எப்போதும் மொய்யிசை உண்டாக்குதல்போல்
அவன் ஓம் இசையோடு தொடர்பு கொண்டுள்ளான்;
மிகக் கறுப்பாக இருக்கிறது தேனீ
மிக வெண்ணிறத்தனாக இருக்கிறான் அவன்.
தன் துணை என்று ஈ
மன்மதனின் வரவேற்புப் பெறுகின்றது;
தன்னை அடக்குபவன் இவன் என
மன்மதனால் மதிக்கப்படுபவன் சிவன்;
பூந்தோட்டங்களில் பறந்து திரிகிறது தேனீ
தெய்விகரைப் பாதுகாக்க அவன் பரந்து நிற்கிறான்,
அழகிய மலைகளில் தேனீ வாழ்கிறது
அவன் திருச்சைலத்தில் உறைகிறான்;
எங்கெங்கும் செல்லும் தேனீ
அவன் எங்கும் மேவியிருக்கிறான்;
அரசனை நிகர்க்கும் சிவன்
என் நெஞ்சத் தாமரையில் இருக்க
மகிழ்வு கொள்வானாக.

இன்பம் வழங்குவோனே ! நீல மிடற்றனே !
சாதகப் புள்ளாகிய என்மனம்
இடர் தரும் அவப்பேறுகளாகிய
கோடை வெம்மையினின்று
தடுத்துக் காக்கும் ஆற்றலுள்ள
இரக்க மழை பொழியும் கார்முகிலுக்கு
(நின் பொருட்டு) ஏங்கி நிற்கிறது;
ஞானக் கனி விளையுள் கருதிக்
கடவுளராலும் மெய்யறிவாளராலும்
அது போற்றற்கு உரித்தாயுளது ;
எந்த வடிவும் மேற்கொள வல்லது அது,
மெய்யடியாராம் ஆடுமயில்களின்
கூட இருப்பது,
மலைமுகடுகளில் குடியிருப்பது
ஒளிநம் சடையில் மின்னொளி
உடையது அது.

O

பெருமான் சிவன் ஆடுமயில் போல்வான்
மயில் போன்ற நீலக் கழுத்தினன்
மயில் போன்றே வானம் உச்சிமுடியாகப்
பெற்றவன்;
பாம்புகட்கு அச்சம் தரும் பகை மயில்
அவனோ பாம்பு அரசுகளை ஆள்பவனாகக்
கண்ட மாலையாகத் தரிந்திருக்கிறான்;
அழகிய தோகையால்
அணிபெற்றுள்ளது மயில்;
சிவனும் அழகிய அணிகளால்
அலங்காரம் பெற்றுளான்;
மயில் தன் இயற்குரலாம் அகவுதல் செய்கிறது

அவன் 'ஓம்;' எனும் ஒலியைக் கற்பிக்கிறான்;
குன்றுகளின் மேல் முகில் கூட்டம் கண்டதும்
மயில் கூத்தாடுகிறது
மலையில் அழகிய இளம் செவ்வியைக் கண்டதும்
சிவன் மகிழ்ந்து ஆடுகிறான்
இங்ஙனம் மயில் போல்பவனை
வேதாந்தக் காவினில்
விளையாட விழைபவனை
நீல மிடற்றனை
சிவனை, நான் வணங்குகிறேன்.

O

கோடைப் பருவத்தின் இறுதி நாட்களில்
அந்திப்பொழுதில்
இடிமுழக்கமாகத் திருமால் கொட்டும்
மத்தள ஒலி முழங்க
வானவரின் விழிகள் மின்னென மிளிர
அடியாரின் பேரின்பக் கண்ணீர்
மழையாகப் பொழிய
தெய்விகத் தாயாகிய பார்வதி
பெண்மயிலென இலங்க,
தன் அழகிய நடத்தால் மேம்பட்டு விளங்கும்
மயிலை, நீல மிடற்றுச் சிவனை,
நான் போற்றி செய்கிறேன்.

O

மகிழ்ச்சிக்கெல்லாம் மூலாதாரன்,
யாவற்றுக்கும் முந்தியே இருந்து வருபவன்,
எல்லையிலா ஒளி,
மறை மொழிகளால் புலனாகுபவன்,
ஈடுபாட்டன்பால் அடையப் பெறுபவன்,

அறிவின்பம் தன் இயல்பாக இருப்பவன்,
மூவுலகைக் காத்து நிற்பவன்,
யோகியரெல்லாம் கருத்தூன்றற்கு உரியவன்,
தெய்விகரால் துதிக்கப்படுபவன்,
மாயையை ஆள்பவன்,
பின்னரிக்கிடக்கும் தலைமுடி தாங்கியவன்
அழகிய தாண்டவக் கூத்தினைச்
சுழன்றாடுபவன் – ஆகிய
அந்த இனியவனை,
நான் வீழ்ந்து பணிகிறேன்.

O

மகிழ்ச்சிக் கெல்லாம் இருப்பிடமானவன்
நிலையானவன்
முக்குணத்தின் உருவானவன்
உடம்பு மூன்றையும் வென்றவன்
மலைமகளின் பேரின்பம், மெய்ப் பொருள்,
முதல் இல்லறத்தன்,
அறிவாளர்க்கு மெய்யுணர்வாகக்
காட்சி தருவோன்
மாயையாம் தன் ஆற்றலால்
மூவுலகையும் சமைத்தவன்
உபநிடதங்களின் உட்பொருளாக ஒளிர்பவன்
அந்திப் போதில் தாண்டவக் கூத்து ஆடுபவன்
ஆகிய
அந்த இனியவனை நான் வீழ்ந்தேத்துகிறேன்.

O

உணவுக்காகப் பணம் தேடி
ஒருவர்பின் ஒருவராக நான்
வறிதே தேடி அலைந்தேன்;
யாவும் அறிந்தவனே !
நின்னை வழிபடும் வகை அறிந்திலன் யான்.
மன்னுயிர்களின் மன்னா !
அன்படியாரின் பாவங்களைத் தீர்ப்பவனே !
உயிர்களின் இதயாசனத்து இருப்பு உடையாய் !
முன்னே முன்னே நான் ஈட்டிய
சிறப்புகளின் முதிர்வு கருதியாவது
என்னை நீ காத்தல் வேண்டும்.

O

ஆ!
ஒருவன் கதிரவன்
விண்ணும் மண்ணும் கவிந்துள
இருள் வளையங்களைக் கிழித்துத்
தனது ஒளியைப் புலப்படுத்துகிறான்;
மன்னுயிர்கட்கு இறைவா!
எண்ணிலாக் கதிரவரின் ஒளிகொண்ட
நீ
உன்னைப் புலப்படுத்தல் இயலாதா?
என்னைச் சுற்றி
எவ்வளவு அடர்ந்துள்து இருள் என்று
உனக்குத் தெரியாதா?
எனவே
அவ்விருள் முழுமையும் அழித்து
நின்னை வெளிக்காட்ட உளங்கொள்வாயாக!

உயிர்க்குலத் தலைவா!
எங்கும் மேவியிருப்போய்!
கௌரி கணவா!
அன்னம் தாமரைசெறி குளம் நாடுகிறது
சாதகப்புள் மழைமுகில் நாடுகிறது
சக்கரவாகம் பரிதியை நாடுகிறது
சகோரப் பறவை நிலவைத் தேடுகிறது
அவ்வாறே
உபநிடதங்களில் தேடற்குரிய
இறுதி விடுதலையாம் பேரின்பத்தை
அளிக்க வல்ல நின் தாமரைச் சேவடியை
எனது நெஞ்சம் நாடுகிறது.

O

நீரோட்டத்தில் சிக்கினோன்
கரையைத் தேடுகிறான்
களைப்படைந்த வழிப்பயணி
மர நிழலை நாடுகிறான்
மழையில் மாட்டிக்கொண்டோன்
வசதியான வீட்டைத் தேடுகிறான்
விருந்தோம்பல் வேண்டுபவன்
இல்வாழ்வானை நாடுகிறான்
வறுமையில் அடிபட்டவன்
கொடைக்குணச் செல்வனை நாடுகிறான்
குளிரில் அகப்பட்டோன்
நெருப்புக் கணப்பை நாடுகிறான்
அவ்வாறே என்மனம்
அச்சம் யாவும் தொலைக்கவல்ல
சிவனின்
மலர்ப்பாதம் நாடுகிறது.

O

உதிரும் அழிஞ்சிலின் வித்து
தாய் மரத்தின் மீது ஒட்டிக்கொள்கிறது
இரும்பு ஊசி காந்தத்தினுழைச் சென்று
ஒட்டிக் கொள்கிறது
உள்ளன்பு மிக்க மனைவி
கணவனுடன் ஒன்றி நிற்கிறாள்
படர்கொடி
மரத்தைச் சுற்றிப் பற்றிக் கொள்கிறது
ஆறு கடலை நாடி அடைகிறது
அவ்வாறே
எண்ணத்தின் எல்லா இயக்கமும்
இறைவனின் தாமரைத் தாளிடம்
தானாகச் சென்று
எப்போதும் ஒட்டி நிற்பதாம்
மன நிலையே இறையன்பு என்பதாகும்.

O

இறைவா !
பக்தன் ஆகிய தாய்
பக்தியாகிய தன் குழந்தையை
நின் நினைப்பாகிய கட்டிலில் கிடத்திச்
சீராட்டுகிறாள்; அவள்
உவகைக் கண்ணீரால்
மெய்ம்மயிர் சிலிர்க்கச் செய்கிறாள்
தூய்மை என்ற போர்வையால் பொத்துகிறாள்
நின் கதைகளாம் அமுதினை
வேதங்களாம் சங்கினால்
அவனுக்குப் புகட்டுகிறாள்
உருத்திராக்க மணிகளாலும்
புனித நீறாலும்
அவன் மேனிக்குப்
பாதுகாப்புச் செய்கிறாள்.

O

தேய்ந்த தொடுதோல் (செருப்பு)
சிவனது கண் இருக்குமிடத்தைக் காட்டும்
கருவியாகிறது;
வாய் கொணர்ந்த நீர்
அவனது தூய நீராட்டுக்கு ஆகின்றது ;
கடித்துப் பார்க்கப்பட்ட கறித்துண்டு
புதிய படையற் பொருள் ஆகின்றது;
வேட்டுவனாக இருந்தோன் (கண்ணப்பர்)
அடியாருள் விழுமியோன் ஆகிறான்
இறையன்பால் ஆற்ற முடியாதது
என்ன தான் இருக்கிறது?

O

மலைமகள் மணாளா!
மகிழ்வு அளிப்பவனே!
நின் மென் தாள்
கால தேவனின் மார்பை
உதைக்க முன்னிற்கிறது
அஞ்சவரும் அரக்கனை அழுத்த முனைகிறது
மலைமேல் நடப்பதில் ஈடுபடுகிறது
நின்முன் வீழ்ந்து பணிவாரின்
முடிகளோடு உராய்தல் செய்கின்றது
ஆகலின்
அந்தத் தாள்களுக்குப் பாதுகாப்பாக
என் மனமாகிய
மாணிக்கப் பாதுகையினை மாட்டிக் கொள்வாயாக.

O

பவானி கேள்வா !
நின் தாமரைத் தாளைத் தொழுவோர்
அவர் யாவரேயாயினும்-
காலன் தன் மார்பில்
இன்னோர் உதை கிடைக்கும் என்றஞ்சி
அவரை விட்டு ஓட்டம் பிடிக்கிறான்;
விளக்கனைய சுடர்மணிகள் பதித்துள்ள
தத்தம் முடிகளை அசைத்து
அமரர் அவரைப் போற்றுதல் செய்கின்றனர்;
விடுதலையாம் கன்னி
நெருக்கமான அணைப்பில்
அவரைக் கட்டிக் கொள்கிறாள்;
ஆக,
மூவுலகிலும் அவர் அடையத் தக்கது
பிறிதென்ன இருக்கிறது ?
O
நலம் யாவும் நல்குவோனே!
இவ்வுலகுகளைப் படைப்பது
நினக்கு ஒரு விளையாட்டு,
மானிடர் நின் விளையாட்டுப் பொருள்;
ஆகலின்
நான் செய்தன எவையாயினும்
அவை முழுக்க
நின் உவகைக்கென்றே அமைந்தவை;
இங்ஙனம், மன்னுயிர்க் கிறைவா!
என் செயல் எல்லாம் நிச்சயம்
நின் கேளிக்கைக்காக இருந்திருக்கும்
என்பதால்
எனக்குப் பாதுகாப்புத் தருவது
நின் கடமையாகின்றது.
O

அண்ணல் சிவனைச் சிந்திப்பதில்
முனைகிறேன் நான்;
நிலையான விடுதலையாம் கனியை வேட்பார்
செய்யும் செயல் அது,
கண்ணீர் உகுத்தல் மெய் சிலிர்த்தல் போன்ற
இனிய பல இறையன்பு அனுபவங்கள்
தருவது அது.

O

இரக்கமுள்ள ஆயனே;
எனது ஒரே ஆவினைக் காப்பாயாக.
நின்மாட்டுக் கொண்ட
அன்பாகிய ஆன் அது;
அமுத இன்பம் பொழிவது போல்
விடாது பால் பொழிவது அது;
நின் தூய திருவடியாம்
கூடத்தில் இருந்துவருகிறது அது;
என் சிறப்பான செயல்களுக்காக
நான் அடையப் பெற்றது அது.

O

அமாவாசைத் திங்கள்போல்
நான் மந்தன் இல்லை.
தன் நெஞ்சத்து
முயலை அது கொண்டிருத்தல் போல்
மாக்களோடு நான் உறவு கொண்டிருக்க வில்லை
வளர்ந்தும் தேய்ந்தும் வருதலாகிய
களங்கம் போன்றவற்றால்

நான் கறைப்படவில்லை;
திங்களின் போக்கு ஒழுங்கானதன்று
நான் அத்தகையன் அல்லன்;
அதற்கு இருக்கும் குறைகளுள்
ஏதேனும் எனக்கு இருப்பதாயினும்
திங்களை முடியில் தரித்திருக்கும் நினக்கு
நானும் ஓர் அணிகலனாயிருக்கத்
தக்கவன் அல்லனோ?

O

சிவன் யாவர்க்கும் இறைவன்
அமைதியும் அருட்கனிவும் ஆனவன்
முடிவிலாக் கொடைகள் வழங்குபவன்
சுதந்திரமானவர் அவனை
அந்தரங்கத்திலும் வெளிப்புறத்திலும்
வழிபடல் எளிதேயாம்;
ஏனெனில் அவன் என்னிறைவன்
அரசர்க்கு அரசன்
என் இதயத்தும் இருக்கிறான்
உலகுகள் யாவும் கடந்தவனாகவும் இருக்கிறான்.

O

அறிஞரிற் சிறந்தோர்
தம் விருப்பாகிய வில்லை
உறுதியான இறையன்பால் வளைத்து
இறைத் தியானம் என்ற
இலக்குத் தவறா அம்புகளால்
பாவங்களாம் எதிரிகளை அழித்து
வெற்றி வீரராகி
விடுதலையாம் அழிவிலா ஆட்சி உரிமை
அடையப் பெறுகின்றனர்.

O

இறைத் தியானமாம்
மந்திர மையை விழிகளில் தடவிக்கொண்டு
உன்னிப்புடன் தேடுமின்;
இறைவன் திருப்பெயர்களைச்
சிறந்த மந்திரமாக் கொள்மின்;
அதனால்
அறியாமை எனும் இருள்தடைகளை
உடைத்துத் திறமின்;
இங்ஙனம் செய்வோர்,
ஓ, இனிய நலத்தோனே!
பாம்புகள் அணிகலனாக அழகுசெய்யத்
தெய்விகரால் கொண்டாடப்படும் நின்
தாமரைத் தாளாகிய
கருவூலப் புதையலை
இந்த உடம்பு உள்ளபோதே அடைகின்றனர்;
மானிட வாழ்வின்
மெய்ப்பயனை எய்துகின்றனர்.

O

என்றன் நன்மனமே!
சிவனின் தாமரைத் தாளை வழிபடு;
நீ விரும்பும் விடுதலைக்குரிய
உயர் மூலிகை உள்ள நன்செய் அது
பூ மடந்தை புவிமடந்தை ஆகியோரின்
கேள்வனான திருமால்
வராக வடிவெடுத்து அடைந்த
நன்செய் அது.

O

திக்குகளை ஆடையாக உடைய
சிவனின் தாமரைத் தாள்,
தீய போக்குகள் நோவுகள்
பிணிக்கும் ஆசைகள் ஆகிய
நாற்றங்களைப் போக்கும்
தன் விழுப்பமான மணத்தால்
என் மனமாகிய பேழையைக்
கமழ்ந்திடச் செய்யுமாக.

O

அனைத்துலகங்கட்கும் இறைவா!
மதவேளை மாய்ப்போனே!
ஆனேற்றின் மீது ஏறிச் செல்வோனே!
என் மனமாகிய குதிரை
நல்லியல்பு உடையது
அழகழகான வெவ்வேறு
இயக்கம் கொண்டது
மிக்க விரைவுடையது
குறிப்பு அறியும் திறமுடையது
மாசற்றது
நல்ல குறிகள் யாவும் அமையப்பெற்றது
அதனை நின் ஊர்தியாகக் கொண்டு
இவர்ந்து செல்வாயாக!

O

சிவன் பாதமாம் விசும்பில் உறையும்
தெய்விகக் காதலாம் மேகம்
பேரின்ப மழை பொழிகிறது;
எவர் தமது ஏரியை நிரப்பிக் கொள்கின்றனரோ
அவர் நல்ல அறுவடை அடைவர்,
மற்றையோர் அடையமாட்டார்.

இறைவா!
தன் தலைவனைப் பிரிந்திருக்கும் இளந் தலைவிபோல்
என் மனம்
நின் தாமரைத் தாளிலே ஆசைகொண்டு
அதனையே நிலையாக நினைந்திருக்க நாடுகிறது;
சிவன் பெயரில் மயக்கம் கொண்டு
அது நின்னையே தியானித்திருக்க,
கண்டிருக்க, புகழ்ந்திருக்க
ஈடுபாடு மிக்குள்ளது.

O

புதுமணம் புணர்ந்த மணப் பெண்ணை
அவள் மணாளனின் நற்பண்புகளைச் சொல்லி
உற்சாகப்படுத்துவது போல,
இறைவா,
என் மனத்தை நல்லறிவுரையால் மேம்படுத்து;
நின் தொண்டில் அது
முறையாகப் பயிற்சி பெற்றிருக்கிறது,
பணிவுப் பண்புடையது,
நல்லோர் தூயோரின் நிழலில்
இருந்து வந்துள்ளது அது.

O

நலம் அளிப்பவனே!
யோகியர் நெஞ்சமாம் தாமரை மலர்மிசை
நடக்கும் பழக்கம் உடையன நின் தாள்கள்;
மரண தேவனின்
கடுமையான மார்பெலும்புக் கதவினை
அவை எப்படி உடைத்துத் திறக்கச்செய்தன?
ஆ, நின் தாள்கள் எவ்வளவு மென்மையானவை!

அவற்றின் பாதுகாப்புக் குறித்து
ஆர்வமான நினைப்புகளால் என் மனம் கவல்கிறது.
எங்கெங்கும் மேவியிருப்பவனே!
அவற்றை என் முன் காட்டியருள்
என் கைகளால் தாங்கிக் கொள்வேன்.

O

''இம் மானுடன் பிறப்பான்,
அவன் நெஞ்சம் கடினமானது
அதன் மேல் நான் நடனமிட வேண்டும்''
எனக்கு உய்தி அளித்தற் பொருட்டு
நீ இங்ஙனம் நினைந்து
முற்காலத்தே
நின் மெல்லிய பாதங்களால்
மலை மேடுகளில் நடையாடிப்
பயின்றுள்ளனை;
நலந்தருவோனே!
இல்லாவிடில், வானக மாளிகைகள்
பூ மஞ்சங்கள் பரப்பிய மேடைகள் போல்வன
நிறைய இருக்க
நீ ஏன் கற்பரப்புகளில் நடனமிட வேண்டும்?

O

பெருந்தேவா!
தெய்வ அன்னையுடன் இருப்பவனே!
தனது நோத்தில் பகுதியை நின்னை வழிபடலிலும்
பகுதியைத் தியானம் மெய்ம்மறந்த களிப்பு
ஆகியவற்றிலும்
பகுதியை நின்திருமுன் வீழ்ந்து வணங்குதலிலும்

பகுதியை நின் கதைகளைச் செவிமடுப்பதிலும்
பகுதியை நின் திருமேனி காண்டலிலும்
பகுதியை நின் புகழ்ப்பா இசைப்பதிலும்
செலவிட்டு
நின்னிடம் தன் இதயத்தை உவகையுடன்
ஒப்படைத்துவிடும் நிலையை எய்தியவன்,
உண்மையில்
இவ் வாழ்விலேயே விடுதலை பெற்றவனாகிறான்.

O

நின் அம்பாக, நின் காளையூர்தியாக,
நின் உடம்பிற் பாதியாம் மாதாக,
வராகமாக, நின் நண்பனாக,
நின் மத்தளங் கொட்டியாக,
பல வடிவுகள் எடுத்தவன்,
தன் கண்ணையே தாமரை மலராக
நின் காலடியில் வைத்தவன் ஆகிய
மாலவன்
நின்னிலே ஒரு பகுதியாக
வணக்கத்திற்குரியாரில் வணக்கத்திற்குரியனாக
உள்ளான்;
அவனின் மேம்பட யாரே உள்ளனர்?

O

தேவ தேவியர்
பிறப்பிறப்புக்கு உள்ளாவார்கள்;
அவர்களை வழிபட்டு
என்ன இன்பம் கிடைத்துவிடப் போகிறது?
ஐயம் வேண்டா.

தெய்வத் தாயுடன் ஒன்றுபட்டுள்ள சிவன்
பிறப்பிறப்பு இல்லான்
அவனை வழிபடுவோர்
மெய்யாகவே இன்புற்றிருப்பர்;
மெய்யாகவே அன்னோர் மேலானவர்.

O

எல்லா நலனும் அளிப்பவனே!
எல்லாவற்றுக்கும் காரணனே!
உலகம் அனைத்துக்கும் நேயனே!
உண்மை அறிவு இன்பக் கடலே!
நல்லியல் மாதாகிய என் புத்தியை
நினக்குப் பணிசெய் துணையாம்
கௌரிக்குத் துணையாக
வழங்குகிறேன்;
இரக்க முள்ளானே!
என் இதயமாம் மனையில்
எக்காலத்தும் வதிந்திருப்பாயாக.

O

பிறை சூடிய பெம்மானே,
நான் பாற்கடல் கடைய வல்லாதேன்
[ஆகலின் அருந்த நஞ்சும் சூடப் பிறைப்பூவும்
நினக்குத் தர இயலாதவன்];
கீழுலகம் செல்ல வல்லாதேன்
[ஆகலின் நினக்கு அரவ அணிகள்
அளிக்க இயலாதேன்];
வேட்டை வல்ல வேட்டுவன் அல்லேன்
[ஆகலின் ஆனை உரி நினக்கு
அளிக்க இயலாதேன்]

அங்ஙனமாகலின்,
உண்டி மலர் அணி ஆடைகள்
மற்றுமுளவாகிய படையலிட்டு
எங்ஙனம் பூசனை புரிகுவேன்?

O

உமாதேவா!
பூசனைப் பொருள்கள் நிறைய
வழங்கப்படுவதாயினும்
நின்னை யான் எங்ஙனம் பூசிப்பேன்?
ஏனெனில் நான் பறவை வடிவோ
காட்டு வராக வடிவோ எடுக்கவில்லை;
எங்கும் மேவியோனே!
யான் நின் முடியும் அடியும் அறியேன்;
அந்த வடிவுகள் எடுத்த
அயனும் மாலுமே
நின் முடியும் அடியும் அறியகில்லாரே!

O

பேரின்பத்தின் ஆதாரனே!
நஞ்சு நின் உணவு, அரவு நின் மாலை
ஆனைத் தோல் நின் ஆடை
பெரிய ஆனேறு நின் ஊர்தி
இவ்வாறு இருத்தலின்
நீ எனக்கு என்ன கொடுப்பாய்?
கொடுக்க என்ன வைத்திருக்கிறாய்?
ஆகலின்
நின் தாமரைத்தாள் மீதான
மெய்யன்பை எனக்குக் கொடுத்தருள்வாய்.

O

சிவனே!
நான் கடலில் அணைகட்டியவன் (இராமன்)
ஆகும் பொழுது, அல்லது
விந்தம் அடக்கியவன் (அகத்தியன்)
ஆகும் பொழுது, அல்லது
படைப்புத் தேவனை மிஞ்சியவன்
ஆகும் பொழுது
நினக்கு வழிபாடு, போற்றுதல், தியானம்,
ஆகிய செய்யத் தகுதியுடையவன் ஆவேன்.

O

உலகுகளின் தலைவா!
வில் தடி கல் என்பவற்றால் அடிபடுதலில்
நீ மகிழ்தல் போல்
வீழ்ந்து பணிதல், புகழ்மாலை சூட்டல், வழிபாடு
தியானம் மெய்ம்மறந்த களிப்பு என்பவற்றில்
நீ மகிழ்தலில்லை போலும்!
ஆதலால்
நினக்கு எது மகிழ்வு தரும்
என உரை;
அங்ஙனமே செய்குவேன் யான்!

O

மனங் குவிந்து
நின்னை நினைந்திருந்து எனக்குப் பழக்கமில்லை;
ஆனால் நின் கதைகளை
என் நாவால் நவில்கிறேன்
நின் திருவுருவை
என் உளத்தால் போற்றுகிறேன்
எக்காலத்தும் தூயனாம்
சதாசிவன் முன்
என் தலையால் வணங்குகிறேன்.

O

பிறையணிந்த முடியனே!
என் நெஞ்சத்திற் குடியிருந்த—
தொன்று தொட்டு வந்த-அறியாமை தொலைந்தது;
நின் அருளால் அவ்விடத்து
இன்பம் தரும் மெய்யறிவு குடிபுகுந்தது;
நல்லது எதுவோ அதை நல்க வல்லதும்
விடுதலையின்பத்தின் வைப்பாக இருப்பதும்
ஆகிய நின் தாமரைத் தாளை
மெய்ம்மறந்து வணங்குகிறேன்.

O

கௌரி கொழுந!
நின் அருள்பொழி நோக்கால்—
கேடுகாலம் ஆணவம் அவப்பேறு துயரம்
பொய்ப்பெருமை கெட்டபேச்சு ஆகிய
தீயூழ் அடையாளங்கள் அகற்றப்பட்டன;
நின் சீர்க் கதைகளாம் அமுதினை
எப்போதும் உண்டுவரும் என்னை
இப் பிறப்பிலேயே கைதூக்கி விடுவாயாக.

O

மலைமகள் மணாளன் எல்லாம் வல்லன்
முடியில் பிறைக்கொழுந்து அணிந்தோன்
நீல முகில் போல் அழகிய மிடறு உடையவன்
ஆகிய சிவனாம் சிறந்த பேரொளியில்
என் நெஞ்சமே எப்போதும்
நீ களித்திருப்பாயாக.

O

சிவன் திருக் கதைகள் கிளக்கும் நாவே நா,
அவன் திருமேனி காணும் கண்ணே கண்
அவனைக் கும்பிடும் கையே கை
அவனை நினைந்திருப்போன் யாவன்
அவனே வாழ்வின் முடிந்த முடிபாம்
பயனை அடைந்தவனாவன்.

O

பவானி கேள்வ!
நலம் தருவோனே!
என் நெஞ்சம் கடினமானது
நின் பாதம் மென்மையானது
என்று நினைப்பதை விட்டு விடு;
அது அப்படியானால்
நீ மலையிடை நடப்பது
குடியிருப்பது எப்படி?

O

புரம் (உடல்) மூன்று அழித்தோய்!
என் மனமாகிய மதகளிற்றை
உரன் என்றும் தோட்டியால் விரைந்து பற்றி
மெய்யறிவாகிய பொறியினைப் பயன்படுத்தி
நின் தாளாகிய தறியில்
இறையன்பாகிய சங்கிலியால்
கட்டிப் போடுவாயாக.

O

மிக மேலானே!
இந்த மன யானை பெரியது, மதங் கொண்டது;
தீங்கு தரும் நோக்கோடு
எங்கெங்கும் திரிந்துகொண்டிருக்கிறது,
இறையன்பு என்னும் கயிற்றால்
தந்திரமாக அதை மாட்டி
நின் திண்மை நிலையாம் தூணில்
அதனைக் கட்டிப்போடுவாயாக.

O

இறைவா! கௌரிக்கு இனியவனே!
பல்வகை அணிகள் கொண்டவள்,
அழகிய சொல்லமைதியாகிய நலம் உடையவள்
மிகச் சிறந்த யாப்புகளாகிய
நற்பண்புகள் அமைந்தவள்
இனிய சந்தங்களாகிய
ஒண்மேனி வாய்ந்தவள்
தூய அறிவாளர் அடங்கிய நல்லோர் உலகால்
பாராட்டப் பெற்றவள்,
பெருந்தன்மைப் பாங்குடன்
மெய்யன்பாகிய காதலுணர்வு இயைந்தவள்
பிரம்மம் ஆகிய மெய்ப்பொருளே
தன் மணாளனாக மனத்தில் வரித்தவள்
உயரிய இலக்கியச் செவ்வியாகிய
நல்ல அடையாளங்கள் பொருந்தியவள்
பலவாம் கலைக் கூறுகள்
ஒளிரும் அலங்காரமாக் கொண்டவள்
கவிதை நலமாம் நாணம் இயல்பாகக் கொண்டவள்
தெளிந்த பொருள்களாகிய

செல்வக் கோடு அமையப் பெற்றவள்
வாசகர் நலனுக்காகச்
செயலாற்றும் சீர்மை உடையவள்
ஆகிய என் கவிச் செல்வியை
நின் மணமகளாக ஏற்கத்
திருவுளங் கொள்வாயாக!

O

மேலாம் இறைவா!
அருட் பெருங்கடலே!
நின் தாளும் தலையும் காண
மாலும் அயனும்
வராகமாக நிலம் துளைத்தும்
அன்னமாக விண்ணிற் பறந்தும்
நின் வடிவின் இருபேரெல்லைகளைக்
கண்டு பிடித்தார்களில்லை;
நலம் அளிப்பவனே
எல்லாவற்றின் இறைவா!
இஃது எவ்வாறு பொருந்துமாறுளது?
நான் அறியுமாறு நீ ஆயினை
அஃது எவ்வாறு?

O

உயர்நலம் அளிப்போனே!
வணக்கத்திற்குரியாரின் வரிசை ஒன்றை
நின் அடியாராகிய அயன் முதலிய கடவுளர்
வகுத்த பொழுது
நின் பெயர்க்கு முதல் மதிப்பு அளித்தனர்
ஏனெனில்

சீர்த்திகளைச் சீர்தூக்கிப் பார்க்கையில்
புடைக்கும் பொழுது ஒதுக்கப்படும் உமிபோல
அவர்கள் தாமெல்லாம் முக்கியம் அற்றோர்
என்று கண்டு கொண்டார்கள்.
பரிசில் யாவினும்
மிக உயர் பரிசிலை (விடுதலையை)
அளிக்க வல்லோன் நீயே என
அவர்கள் கண்டு கொண்டார்கள்;
நான் உரைப்பது பொய்யில்லை;
புகழ்ப் பாசுரம்!
ஈண்டு நிலை நிற்பதாக!

O

## திருத்தம்

| பக்கம் | வரி | |
|---|---|---|
| 6 | 4 | அருளியிருப்பினும் |
| 15 | 1 | விழுமிய |
| 17 | 6 | புண்ணிய |
| 28 | அடிக்குறிப்பு | கங்கா ஸ்தோத்திரம் |
| 97 | 8 | கொள்ள |
| 99 | 26 | மல்லிகார்ச்சுனம் |
| 107 | 12 | மலைமகள் |

ஆசிரியரின் பிறநூல்கள்

○ இனியது இனியது
பகவத் கீதை

○ வசிட்டர் சொன்ன
அறிவுரைகள்

○ ஆதி சங்கரரின்
அறிவுத் தலைமணி

○ ஆதி சங்கரரின்
தன்னை அறியும் அறிவு

ஆதி சங்கரர்

# ஆனந்த கங்கை

---

O

இந்தியாவின் மிகப் பெரிய தத்துவ ஞானி, 'சிந்தனை ஒன்றுடையாள்' என்று நாட்டை உருவாக்கிய ஆதி கர்த்தர்களில் ஒருவர், அத்வைத இறைத்தூதர், அருட்பெருங் குரவர், காலத்தை வென்ற நூலாசிரியர் அண்ணல் ஆதி சங்கரர்.

O

அவர் பாடிய தோத்திரப் பாக்களில் பதினைந்து இந் நூலில் தமிழ் மலர்ச்சி பெற்றுள்ளன.

O

அறிவு நெருப்பாக விளங்கிய ஆதிசங்கரர், அடியார் படுதுயராயின நீக்குவதற்கும் அன்பு நெஞ்சினராக ஈடேறுவதற்கும் பக்திப் பாக்கள் புனைந்தார். உள்ளத்தை உருக்கும் இயல்பும், இலக்கியச் செழுமையும் தத்துவ உணர்வும் கங்கையின் புனிதமும் இவற்றில் பொதிந்து கமழ்கின்றன.

O

1200 ஆம் பிறந்த ஆண்டு (1988–89) கொண்டாடப் பெறும் அருள் நாயகருக்கு நெஞ்சார்ந்த வணக்கம் செலுத்தும் பாங்கில் தொடுக்கப் பெற்றுள்ளது அவரது இந்தத் தீஞ்சுவைப் படையல்.

---

## ஆரார்

அறிவரங்கம்